# திராவிடன்

ஆசிரியர்: என். வி. நடராசன்.

மலர்: 8 · 6—5—55 வெள்ளி : 14-பக்கங்கள் : விலை 3 அணா · மாலை: 39


# நாட்டுப் பிரிவினையே தொழிலாளரின் நல்வாழ்வு

## சென்னையில் மே தின விழா - பொதுச் செயலாளர் நெடுஞ்செழியன் முழக்கம்.

உலகத் தொழிலாளர் திருநாளாகிய மேவிழா சென்னை மாவட்ட தி. மு. கழகத்தின் சார்பில் சென்னை திருவல்லிக்கேணி கடற்கரையில் 'இராகவன் பந்தலில்' மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. 1—5—55 ஞாயிறு பிற்பகல் 3-30 மணிக்குச் சென்னை திரு. வி. க. திடலிலிருந்து (கான்ரான்ஸ்மித் நகர் மைதானம்) மாபெரும் ஊர்வலம் புறப்பட்டது. ஊர்வலத்துக்கு நடிகச் செல்வர் எஸ். எஸ். ராஜேந்திரன் தலைமை தாங்கினார். பல்லாயிரக் கணக்கான மக்கள் ஊர்வலத்தில்கலந்து வழி நெடுக விடுதலை முழக்கம் எழுப்பினர். சுமார் ஆறு மணியளவில் ஊர்வலம் கடற்கரையை அடைந்தது.

சென்னை மாவட்ட தி.மு. க. செயலாளர் தோழர் இளம்பரிதி அவர்கள் தலைமையில் மேவிழா ஆரம்பமாகியது. துவக்கத்தில் நடிகமணி டி. வி. நாராயணசாமி, நடிகச்செல்வர் எஸ் எஸ். இராஜேந்திரன் ஆகியோர் பேசிய பின்னர் சென்னை மாவட்ட தி. மு. க. சார்பில் பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்களுக்கு ஒரு வாழ்த்திதழும் மலர்மாலையும் அன்பளிப்பாக அளிக்கப்பட்டன. பின்னர் சென்னை மாவட்ட கிளைக் கழகங்களின் சார்பாகவும், சென்னையைச் சேர்ந்த பல்வேறு தொழிலாளர்களின் சார்பாகவும் பல்வேறு மன்றங்களின் சார்பாகவும் கைத்தறி ஆடைகளும் மலர் மாலைகளும் அணிவிக்கப்பட்டன. இவைகளை யெல்லாம் ஏற்றுக்கொண்டு இறுதியாக பொதுச் செயலாளர், நாவலர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள் பேசியதாவது;— தலைவர் அவர்களே! அன்புகெழுமிய தோழர்களே! என்னைப் பாராட்டும் வகையில் தி, மு, க. கிளைகளும் என்மேல் கொண்ட அன்பினால் பல தனிப்பட்ட தோழர்களும் கைத்தறி ஆடைகளை அணிவித்தனர். நாம் வளர்ந்திருக்கிறோமா, இல்லையா என்பதற்கு இது ஒரு சான்று. மலர் மாலைகளைப் போட்டு மகிழ்ச்சியைத் தெரிவித்த நாம் கைத்தறி ஆனிகளை அணிவித்து மகிழ்ச்சி காட்டுவது உண்மையிலேயே நமது வளர்ச்சியைத்தான் குறிக்கிறது. அறிஞர் அண்ணா அவர்களின் அறிவுரையும் உங்களுடைய ஒத்துழைப்பும் என்றும் எனக்கிருக்கும் என்பதினால்தான் இப்பொறுப்பை நான் ஏற்றுக் கொண்டேன்.

இதே நேரத்தில் தேம்ஸ் நதிக்கரையிலே, பாரிஸ் பூங்காவிலே, சிகாகோ நகரிலே, மாஸ்கோ செஞ்சதுக்கத்திலே இன்னும் எங்கெங்கு தொழிலாளர்கள் இருக்கிறார்களோ அங்கெல்லாம் மே தினம் கொண்டாடுகிறார்கள். இறந்த கால கணக்கைச் சரிபார்க்கவும் இது வரைபெற்ற உரிமைகள் என்ன, இனிப் பெற வேண்டிய உரிமைகள் என்ன என்பதை ஆராயவும் மேநாள் விழா கொண்டாடுகிறோம்.

இந்த நாட்டில் சுயமரியாதை இயக்கந்தான் முதன் முதலில் மேநாளைக் கொண்டாடியது. ஒரு காலம் இருந்தது. அப்போது ஒருவனுடைய உழைப்பை ஒருவன் கேட்கவும், உழைப்பைப் பெற்ற பின்னர், அவன் கொடுத்ததைப் பெற்றுக் கொள்ளவுமான நிலை இருந்தது. பின்னர் 'உழைப்புக் கேற்ற ஊதியம்' என்ற நிலை வளர்ந்து 'சக்திக் கேற்ற உழைப்பு—தேவைக் கேற்ற ஊதியம்' என்றநிலை ஏற்பட்டுள்ளது.

அக்காலத்தில் தடி எடுத்தவனெல்லாம் தண்டல்காரனானான். எவரிடம் 'ஆள் அம்பு' அதிகமிருந்ததோ அவனே ஜமீன்தாரநகவும் மிட்டா மிராசாகவும் இருக்க முடிந்தது. அவனிடம் சொத்துக்கள் உரிமை கொண்டாடி யிருந்தன. அதன் பின்னர் சொத்துக்கள் பிறப்பின் காரணமாக ஒருவனிடம் போய்ச் சேர்ந்தன. அண்ணாமலை செட்டியாருக்கு மகனாகப் பிறந்த காரணத்தால் மட்டுமே முத்தையா செட்டியாருக்குச் சொத்துக்கள் இருக்கின்றன. சாமியப்ப முதலியாருக்கு மகனாகப் பிறந்த காரணத்தால் மட்டுமே ஒருவருக்கு சொத்துரிமை கிடைக்கிறது. ஆகவே 'பிறப்புக்கு உரிமை' என்ற நிலைமாறி உழைப்புக்கு உரிமை என்றநிலை ஏற்பட வேண்டும்.

கடலின் அடித்தளத்திலே ஏராளமான முத்துக்கள் இருக்கின்றன. மலையின் அடியிலே மாணிக்கங்கள் உண்டு. பூமிக்கு அடியிலே இரும்பு உண்டு. ஆனால் அவைகளுக்கு அப்படியே எந்த மதிப்பும் கிடையாது. காட்டிலே வளர்ந்து நிற்கும் மரத்திற்கு தனியாக மதிப்பு எதும் கிடையாது. அந்த மரம் தொழிலாளியின் உழைப்பினால் வெட்டப்பட்டு நாட்டிற்குக் கொண்டு வரப்பட்டவுடன் அதற்கு விலைமதிப்பு ஏற்படுகிறது. விலைஎன்பதற்கு 'உழைப்புக்குக் கொடுக்கும் மதிப்பு' என்று பொருள். 400 ஆண்டுகளுக்கு முன்னர் காடாகவும், கரம்பாகவும் கிடந்த அமெரிக்காவில், சிவப்பு இந்தியர் பச்சை இறைச்சியைத் தின்று வாழ்ந்த அமெரிக்காவில் இன்று சராசரி ஒரு மனிதனின் ஆண்டு வருமானம் பத்தாயிரம் ரூபாய்கள். காரணம் அங்கே உழைப்புக்கு மதிப்பு இருப்பதால்தான், மும்மூர்த்திகள் பத்து அவதாரங்களையும் ஒன்று கூடக் குறையாமல் எடுத்த நம் நாட்டில் ஒரு மனிதனின் வருமானம் 275 ரூபாய்கள் தான்.

துருப்பிடித்த இரும்புத் துண்டுகள் சாலையில் கேட்பாரற்றுக் கிடப்பது போல் திராவிடத்தில் தொழிலாளர்கள் சிதறிக்கிடக்கிறார்கள். அவர்களுக்கு தங்கள் உழைப்பை பயன் படுத்த வேண்டும் என்ற எண்ணம் ஏற்படவே இல்லை, ஏனென்றால் உழைப்பதே கேவலம் என்ற கருத்து நம் நாட்டில் நிலவுகிறது. நாடெங்கும் சிதறிக்கிடக்கும் தொழிலாளர்களை ஒன்று திரட்டவும் உழைப்புக்குத் தக்க ஊதியம் அளிக்கவும் நாட்டிலே உள்ள அரசாங்கம் முனைய வேண்டும், நமது நாட்டில் தற்போது அப்படிப்பட்ட அரசியல் அமைப்பு இல்லை.

தொழிலாளர்கள் உழைப்பின் மேன்மையை உணருமாறு செய்யப்பட வேண்டும். இந்த நாடு தொழிலை மதிக்காத நாடு என்ற அடிப்படைக் கருத்து மாறவேண்டும். தொழிலாளர்கள் எண்ணத்திலே தெளிவு ஏற்படவேண்டும். உழைப்பவர்களுக்கு வேலைதர அரசாங்கம் முன்வரவேண்டும்,

ஆனால் நமது நாட்டிலே உள்ள அரசாங்கமோ ஆண்டையும் இருக்கட்டும் அடிமையும் இருக்கட்டும், சோஷலிசமும் இருக்கட்டும் என்கிறது, பஞ்சையும் இருக்கட்டும் முதலாளியும் இருக்கட்டும், மாதிரி சோஷலிசமும் இருக்கட்டும் என்கிறது, இந்த நிலை மாறி தொழிலாளர் வாழ்வு பெறவேண்டுமானால் திராவிடநாடு பிரிவினைதான் அதை சாதிக்க முடியும்,

ஆகவே திராவிட நாடு திராவிடருக்காக நாம் பாடுபடல் வேண்டும், நாம் சாமான்யர்கள்தான், தி, மு, கழகத்தில் சீமான்களும் பூமான்களும் கிடையாது, சாதாரணமாக அன்றாட வாழ்க்கைக்குப் பாடுபட வேண்டியவர்களே இருக்கிறோம். தி, மு, கழகம் பாட்டாளிகளின் நெஞ்சத்தைத் தொட்டு 'இதய நாடி'களைத் தடவுகிறது என்பதற்கு இங்கே பல்லாயிரக் கணக்கில் கூடியிருக்கிற நீங்களே சாட்சியாவீர்கள், நம்மிடத்திலே காசு இல்லை, ஆனால் உள்ளத்திலும் மாசு இல்லை, அப்படிப்பட்ட நாம் தான் திராவிட நாட்டின் விடுதலைப் பணியை ஏற்றுக்கொண்டிருக்கிறோம்' என்றும் மற்றும் கழக வளர்ச்சி குறித்தும் சுமார் ஒரு மணி நேரம் சொற்பொழிவாற்றினார், கூட்டத் துவக்கத்தில் தோழர்கள் பி ஜி இராதாமணாளன் அன்பானந்தன் ஆகியோர் இயக்கப் பாடல்களைப் பாடினார்,



இசையரசு எம். எம். தண்டபாணி தேசிகர்




## 29

முன்பு:—

கதை பேசினுன் காமுகன். நம்பிக் கிடந்தான் சேகர். சூழ்ச்சி வலைவீச சூழ்நிலைக்குக் காத்திருந்தான் சூதுக்காரன். புள்ளி மானுக்கு வலை தேடினுன் வஞ்சகன் அது அவனது காலடியிலேயே கிடந்தது!

•

சுமைதாங்கி நீண்ட தொடரோவியம். அரசியல் சம்பவங்களையும்; சமூகச் சூழ்நிலையையும் அப்போதைக்கப்போது தெளிவாக்கி தொடர்கதைப் பாதையிலேயே ஒரு புதுஅத்தியாயத்தைத்துவக்கி வைக்கிறது. நாவல் ரசிகர்களையும்......அரசியல் நண்பர்களையும் ஒரே நேரத்தில் திருப்திப்படுத்துகிற இந்த முறை...இந்த நவினத்தின் பூரணச் சிறப்பாக அமைகிறது.

•

அந்திவான நிலவு பாதி முகத்தைக் காட்டியது அந்தரத்தில் தொங்கிக் கொண்டே! சுந்தரந் தாங்கிய முகம் எப்படி யிருந்தாலென்ன? மலர்ந்த தாமரையைத் தடாகத்துத் தண்ணிர் மறைத்திருப்பது...அதுவும் ஒரு அழகாகத்தானே யிருக்கிறது. சோலையிலே பூத்துக் கிடக்கும் அத்தனை மலர் வகையுமே சாலையிலே வந்து கொண்டிருப்பவனின் கண்களிலே பட்டுவிடுவதில்லை. சில முழுச் சிரிப்புக் காட்டும், இன்னும் பல பாதி முகத்தை மட்டும் காட்டிவிட்டு மறைந்து கொள்ளும். இதனுல் அதனதன் தரமோ—எழிலோ குறைந்து விடுவதில்லை! மாளிகை மாடியிலேயிருக்கிருள் 'மனேகரி'... அந்த இன்பவல்லியோ ஜன்னலின் இரும்புக் கம்பிகளின் வழியாக 'போஸ்' தருகிருள். அந்த அந்திப் பார்வையிலே என்ன சுவையில்லாமலா போய்விடுகிறது.

அந்த பகல் தேய்ந்த நேரமும் அப்படித்தானிருந்தது. தேன் குடத்திலிருந்து ஒரு சொட்டுத் தேனை விரலால் தொட்டு சுவை பார்ப்பது போலயிருந்தது சேகருக்கு. சுமைதாங்கிய இதயத்திலும் ஒரு வகைச் சுவை! தேன் குடம் காத்திருந்தது அவனுக்கு! ...அதன் முழுச் சுவையும் தனக்குத்தானென்று எண்ணும்போது தான் பாதையிலே நடந்துகொண்டிருக்கிறோ மென்பதைக் கூட மறந்துவிட்டான்! காலத்தேவன் அவன் காதுகளிலே வீணைமீட்டிக் கொண்டிருந்தான். குதூகலக் குயில் கானம் பாடியது. வானம் நீர்த்துளிகளைச் சொட்டவிட்டது.

அந்தப் பனித் துளிகள் சேகரின் பகட்டான ஆடையை ஈரமாக்கிக் கொண்டிருந்தன. குளிரான நீர்த் துளிகள்...சூடான சிகரெட்டின் மீதுபட்டு அணைத்துக் கொண்டிருந்தன. அந்த சில்லறைத் தொல்லைகள் அவனது சிங்கார உலகப் பயணத்துக்குத் தடையாக வில்லை!

அவனது எண்ணம் முழுவதும் வனஜா நிறைந்திருந்தாள். நாட்டியத்திலே லயிப்புக் கொண்டவன் தன்னை மறந்து ஆட்டத்திலே ஒட்டி விடுவது போல அவன் எண்ணத்தோடு கலந்து போயிருந்தான். வனஜா என்றதுமே முள் குத்துவது போன்ற நிலையிலிருந்தது சேகருக்கு ஒரு காலத்திலே! வனஜா வருகிருள் என்பதைப் பார்த்ததுமே பதுங்கி ஒதுங்கி விடுவான். அவளென்ன பெண்ணுருவிலே வந்த கொடும் புலியா? இல்லை குரூபியா? இரண்டுமேயில்லை......என்ருலும் கூசினுன். வனஜாவைக் காண! நெஞ்சு சூடாகாத நேரம் சேகருக்கு, எனவே, வனஜாவே நெருப்பாகத் தோன்றினுள் அவனுக்கு. அந்தத் தேனருவியிலே சிங்காரப் பண்பாட எண்ணங் கொள்ளவில்லை. அவளுக்கோ 'மோக தாகம்' காதல் வீணையின் நரம்புகளைக் காலம் இழுத்துவிட்டுக் கொண்டிருந்தது. புதுலயம் உதயமானது. பார்த்து ரசிப்பாரின்றி பாலைவன ரோஜாவாகிருேமேயென்ற துக்கமும் வெட்கமும் வனஜாவுக்கு. ஆயிரம்பேர் பார்த்தனர்...வழக்கம் போலவே காதல் கால காவியமும் தொடுத்துப் பூரித்தனரென்ருலும்—இதயத்தில் யாருக்குக் கோயிலெடுத்தாளோ 'அவன்' திரும்பிப் பார்க்கவே யில்லை யென்ருல் வேதனை அவளைச் சிறை பிடிக்கத்தானே செய்யும்!

வெந்து நொந்தாள் காதல் தீயில்! சூழ்நிலையும்—சுய கௌரவமும் காதல் கனலால் தாக்கப் படுமென்று சேகர் எண்ணவேயில்லை. அவன் எண்ணவில்லையென்பதற்காகப் பருவப் பாகன் அசட்டுத்தனமாக யிருக்கவில்லை. மோகமெனும் யானையை உணர்ச்சி அங்குசத்தால் குத்திக் காயப் படுத்தினுன். அதன் பலன் ஓலம்! ஓலம்!

நர்மதாவின் குளிர் பார்வை சேகரை வெறிகாரனுக்கியது. அந்த அகல விரிக்கும் கண்களுக்குள்ளேதான் அகிலமே யிருக்கிறதென்று ஆனந்தப் பட்டான். தொல்லைகளை அந்தப் பொன் மேனியாளின் புன்னகை ஒன்றே போதும் மறக்க...என்றுதான் இதயம் துள்ளிக் கிடந்தான். இப்பொழுதோ புன்னகை சிந்தும் அவள்......புயல் புகுந்த இதயத்தின் சொந்தக்காரி என்பதை மிக மிக நன்ருகப் புரிந்து கொண்டான். அவள் ஒரு சுமைதாங்கி! சோகப் பதுமை! உதட்டிலே புன்னகை மலர்ந்து கொண்டுதானிருக்கிறது அது என்றுமே வாடுவதில்லை என்ருலும்......இதயத்திலே 'எண்ணக் கூத்து'. அது ஓயவேயில்லை. அவளின் வாழ்விலே எத்தனையோ வண்ணச் சேர்க்கை! சொந்த நிறத்தை நெருங்கிப் பழகியும் அவனுல் புரிந்துகொள்ளவே முடியவில்லை சோகத்துக்கு ஆயிரம் காரணங்களையும், அதன் விளக்கமாக லட்சம் தத்துவங்களையும் கூறுகிருள். அவளின் அறிமுகம் அவனது உள்ளக் கதவைத் தட்ட உதவியது. இடையே கடப வேடதாரி கண்ணன் போன்றவர்களின் தொல்லை வேறு! எனவே... தொல்லைகள் எல்லாமாகச் சேர்ந்து குற்றுலத்துக்கே அவனை விரட்டி யடித்து விட்டது, மருந்தின் தன்மையையும், நோயின் லட்சணத்தையுந் தான் சேகர் அறிந்திருந்தானே தவிர மங்கையரின் மனரகசியம் தெரிந்து கொண்டவனுக யிருக்கவில்லை. குழப்பம், குற்றுலத்திலும் வட்டமிடுமென்றுதான் கருதினுன். வனஜா அந்த வேதனைக் கயிற்றை அறுத்தாள். நிரந்தரமாக சேகரின் இதயத்தைக் காலி செய்திருந்தாள் நர்மதா! அந்தக் காலி இடத்தை இப்போதுதான் ஓடி ஓடித் தேடிப் பிடித்துக் கொண்டாள் வனஜா!

நீலப் புருவுக்குக் குறிவைக்க வேண்டும்; அது பறந்துவிட்டால் மணிப் புருவுக்கு...அதுவும் இல்லையென்ருல் வெண்புருவுக்கு என்று எண்ணும் வேடனைப் போலத்தான் சிலரின் எண்ணங்கள் அமைந்து விடுகின்றன. முன்புதேவைப்பட்டாள் நர்மதா ...இப்போதோ வனஜா! இந்த நினைவுகள் வேட்டைக்காரனைத் தானே நினைவுபடுத்துகின்றன. சேகர் அப்படி ஆக்கப்பட்டான். தவிக்கும் தனக்கு வனஜாதான் 'தங்க நிலா' ஆகமுடியுமென்று முடிவாக நம்பினுன்.

காத்துக்கிடந்தாள் அவளும் வீட்டு மாடியிலே, சேகரும் வந்து கொண்டிருந்தான் பாதையிலே. நீர்சொட்டிய ஆடையோடுஅவன் வருவதைக் காணுவதிலே அவளுக்கு ஒரு பதை பதைப்பு.

ஓடோடிக் கதவைத் திறந்து கொண்டு அகங்குளிர வரவேற்ருள். நீர்த் துளிகளைச் சொட்டவிட்டுக்கொண்டே உள்ளே நுழைந்தான். பொத்தானை அழுத்தி மின்விளக்கேற்றினுள்: அந்த ஒளியிலே ஒரு புதுச் சூடு. துவட்ட வெண் துண்டு தந்தாள். அதிலே அவள் காட்டி யிருந்த கைவண்ணம் சித்திர வேலைப்பாடாகி...விரிந்த தாமரையாக யிருந்தது. ஈரத்தைத் துண்டு இழுத்துக் கொண்டது. உடம்பெல்லாம் கதகதப்பு. சேகர் ஒரு மூலையிலே போய் அமர்ந்தான். காபியை சூடாக்க அவள் போய் விட்டாள். கடிகாரத்தின் 'டிக் டிக்' ஓசைமட்டும் பீரங்கி சப்தம் போல சேகரின் நெஞ்சிலே எதிரொலித்தது. என்ன பேசுவது? எதைப்பேசுவது?...இது அவனது சிந்தனை!...என்ன கேட்பார்? எதைக் கேட்பார்?...இது அவளது குழப்பம்.

(அடுத்த வாரம்)

### "ஜமீன் மகன்"

களஞ்சியம் ஆசிரியர் ஏ. எஸ். வேணு பி. ஏ. அவர்கள் இராமாயணத்தை சமூக கதையாக மாற்றி, நடிப்புப் புலவர் நாடகக் கழகத்தின் சார்பில் சென்ற 10—4—55 அன்று நடிப்புப் புலவர் கே. ஆர். இராமசாமி தலைமையிலும் அறிஞர் அண்ணு அவர்களின் முன்னிலையிலும் செங்கற்பட்டு திறந்த வெளி அரங்கில் நடத்தினர். பொதுமக்கள் இந்த புது முயற்சியை பாராட்டினர். தண்டமாக நடித்த (எம். எஸ். நாராயணன்), சுசிலாவாக நடித்த ஆர். காந்திமதி மக்கள் பாராட்டுதலைப் பெற்றனர். நாடகம் திருக்கழுக்குன்ற வைத்திய விடுதிக்காக நடத்தப் பட்டது. இதன் முயற்சி தோழர் எஸ். எஸ். பி. லிங்கம் அவர்களையே சாரும்.

### மதிவாணன் தோற்றம்

சித்துக்காடு தி. மு. கழகத் தோழர் அய்யாக்கண்ணு பாக்கியம் அம்மை ஆகியோரின் ஆண் குழந்தைக்கு 22-4-55 அன்று சித்துக்காட்டில் நடைபெற்ற தி. மு. கழகப் பொதுக் கூட்டத்தில் தோழர். என். வி. நடராசன் அவர்களால் மதிவாண்ன் என பெயரிடப்பட்டது. இதன் நினைவாக திராவிடன் வளர்ச்சிக்கு ரூ. 1. நன்கொடை வரப் பெற்ருேம். நன்றி—நிர்வாகி.





## "மொட்டைத்" தோழர்!

நமது நண்பர் ஒருவர் இருக்கிருர். அவரை "மொட்டைத்" தோழா! வென்று நான் மட்டுந்தான் அழைக்கலாம்! மற்றவர் எவரேனும் அவரை அவ்வாறழைத்தால் தவிடுபொடி ஆக்கி விடுவார்! அவ்வாறு ஒரு முறை நடந்ததைக் கண்டே இவ்வாறு கூறுகிறேன்!

அந்த "லைசன்ஸ்" எனக்கு மட்டும் ஏன்? என்று கேட்கத்தோன்றும்!

'நமது நண்பரு'க்குப் பகுத்தறிவுப் பாலூட்டியவன் நான்! சுயமரியாதைச் சோறிட்டவன் நான் சீர்திருத்தச் சுவையூட்டியவனும் நானே!

சலசலப்பைச் சமாளித்து, விதவிதமான விரோதங்களை வெட்டி உதறி, பிடிவாத குணத்தோடு **பெரியார்** தலைமையிலேயே திருந்திய திருமணத்தை அவர் செய்து கொள்ளச் செய்தவனும் நானே! அவர் செய்து கொண்ட சீர்திருத்தத் திருமணமே அவருக்கு முதன் முதலாக நடந்த திருமணம்!

ஆழ வேரூன்றி அசையாது நெட்டி நிற்கும் மலையைப் போன்றது அவரது சுயமரியாதை உணர்வு! திராவிட நாட்டுப் பற்று! பகுத்தறிவுப் பண்பு! எல்லாம்.

போதும்! உனது வீரப் பிரதாபங்களும், அளப்புகளும்!' என்று நீங்கள் நினைக்கு முன்பே விஷயத்தைக் கூறிவிடுகிறேன்.

கற்பனைக்கு ஒத்திகையாக இதை எழுதவில்லை! உண்மை நிகழ்ச்சிகளையே உரைக்கின்றேன்

'நமது தோழர்' பதினைந்து வருடங்களுக்கு முன்பு அரசாங்க உத்தியோகத்திற்குச் சென்ருர்; ஒரு அய்யங்கார் முன்னிலையில் நிறுத்தப்பட்டார். அலுவலக சடங்குகளெல்லாம் முடிந்து பெயரேட்டில் பெயரெழுதப் போனுர் அந்த "நாலுமயிர்" உச்சுக்குடுமி அய்யங்கார்! எஸ். எஸ். எல். சி. புத்தகத்தைப் பார்த்து 'நமது தோழரி'ன் பெயரை எழுத்துப் பிறழாமல் எழுதி நிறுத்தி 'நீ என்ன நாயுடுவா? பிள்ளையா?...' என்று கேட்டார்! அதெல்லாம் ஒன்றும் வேண்டாம்! பெயரே பெரிது! போதும் என்ருர் தோழர்! அதற்குள் தோழரின் தகப்பனுர் பெயரைப் பார்த்து 'ஏன்?...அதைப் போட்டுமா? என்ருர் அய்யங்கார். வேண்டவே வேண்டாம்! என்று அழுத்தமாகக் கூறினுர் 'நமது தோழர்'. அப்போதுதான் அய்யங்கார் 'அய்யங்கார் வேலை'யைக் காட்டினுர்! நீ என்ன சுணுமனுவா? நீ மொட்டைத்... தோழராகவே இருக்க விரும்புகிருயா? என்று அகம்பாவமாகக் கேட்டார் அய்யங்கார். அதற்கு நமது தோழர் உடன் பதிலளித்தார். ஆம்! நான் சுணுமனுதான்! 'மொட்டை'த்... தோழராக இருப்பதில் பெருமையே யடைகிறேன்! என்று பதிலிறுத்தி — எனது சுயமரியாதை போதனைக்கு மாண்பூட்டினுர்! என்னே அவர்தம் உணர்வு!

அதிலிருந்து 'மொட்டை'த் ...தோழரே! என்று நான் கூறினுல் பெருமைகொள்வார்! ஆனுல் மற்றவர் என்னைப் பின்பற்றும் போதுதான் அவருக்குப் பிடிப்பதில்லை! நான் அவரை 'மொட்டைத்......தோழா! என்றழைக்கும்போது என் உள்ளத்திலும் அவர் காதுகளிலும் உறைவது 'சுயமரியாதைத் தோழா!' என்ற வாசகமே! அதன் அடிப்படைக் கருத்தும், சம்பவமும் எங்களிருவருக்குத்தான் தெரியும்! மற்றவர்கள் என்ன கண்டார்கள்? மற்றவர் நினைப்பதும் அழைப்பதும் 'கிண்டல்' அன்றி வேறல்லவே அல்ல! அத்தகைய கிண்டல்தான் 'நமது தோழரி'டம் பலிக்காது.

இவ்வளவு எனது பழைய நினைவுகளைக் கிளறிய மந்திரி மாணிக்கவேலருக்கு எனதுநன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்ளக் கடமைப்பட்டுள்ளேன். ஏனெனில் அவர் **இப்போதுதான்** 'நாயகர்' என்ற பட்டம் வேண்டாமென்று வெட்டி விட்டார்! அவரை முதலில் நான் பாராட்டாமல் வேறு யார் பாராட்ட முடியும்?

அவரது அந்த நல்ல செய்கைக்கும் அவரது தோழர்களால் எதிர்ப்பு காட்டப்படுதல்தான் எனக்கென்னமோ வேதனையாக இருக்கிறது!

சாதி அடியோடு ஒழிய வேண்டும்! மேல் சாதிக்காரர்கள் கண்டிப்பாய் கீழ்சாதிகளிலேயே திருமணங் கொள்ளவேண்டும்! கலப்புத் திருமணமே சாதியை ஒழிக்க கைகண்ட மருந்து! சாதிவிட்டு சாதி கல்யாணம்செய்து கொண்டவர்களுக்கு உத்தியோகச் சலுகை தர வேண்டும். என்றெல்லாம் தாராளமாகத் தொண்டை கிழிய நாவளர பேசும் இந்நாளிலும் சாதிப் பட்டத்தை விட்டொழித்தால் எதிர்ப்பாமே! எதிர்ப்பு—அதென்ன எதிர்ப்பய்யா? புரியவே இல்லையே!

நம் **பெரியார்** எப்போதுமே, சுயமரியாதை உணர்வு கொண்டதிலிருந்து, **ஈ. வே. ராமசாமி** என்றுதான் கூறிக்கொள்கிருர். இது நாடறிந்த உண்மை! உலகறிந்த உண்மை! உண்மை இவ்வாறிருக்க நம் நாட்டுப் பத்திரிகைகள் பலவற்றிக்கு இவ்வுண்மை உறைக்காது போயோ அல்லது வேண்டுமென்ற இறுமாப்பாலோ ஸ்ரீ ஈ. வே. ராமசாமி **நாய்க்கர்** என்று தான் எழுதித் தத்தமது ஜாதி புத்தியைக் காட்டிக் கொள்கின்றன! ஆனுல் அதே பத்திரிகைகள் நம் மந்திரி மாணிக்கவேலரை சாதாவாகவே எழுதி 'நாயகரை' விடுவித்து எழுதுகிற அளவேனும் எனக்கு ஒருவகை மகிழ்ச்சிதான்.

"நான்தான்"

## டாக்டர். அம்பேத்கார் அவர்களின் 64-வது பிறந்த நாள் விழா.

பம்பாய் தாராவித் தாழ்த்தப்பட்டோர் சம்மேளனத்தின் சார்பாக 1955 ஏப்ரல் 16, 17 தேதிகளில் மேற்படி விழா தாராவி கட்டவாடி மைதானம் கே. எஸ். பாலகிருஷ்ணன் நினைவுப் பந்தலில் தாராவி சம்மேளனத் தலைவர் கே. எம். விஸ்வநாதன் தலைமையில் வெகுசிறப்பாகக் கொண்டாடப்பட்டது.

விழாவைச் சிறப்பிக்க தமிழ் நாடு தாழ்த்தப்பட்டோர் சம்மேளன தலைவர். ஆ. ரத்தினம் எம். எல்.ஏ. அவர்கள் அழைக்கப்பட்டிருந்தார்கள். முதல் நாள் 16-4-55 பகல் 12-30 மணிக்கு தலைவர் தாதர் புகை வண்டி நிலையத்தில் இறங்கியதும் சம்மேளன முக்கியஸ்தர்களும், தொண்டர்களும் அவர்களை மிக உற்சாகத்துடன் வரவேற்று அழைத்து வந்தார்கள். மாலை சுமார் 6-மணிக்கு சம்மேளனக் கூட்டுச் செயலாளர் எம். ஏ. சண்முகராஜ் வரவேற்புரையுடன் விழா ஆரம்பிக்கப் பட்டது. பி. எஸ், ஆனந்தராஜ் சம்மேளனக் கொடியேற்றி வைத்துப் பேசினுர்கள். வி. எஸ். டி. ராஜா அம்பேத்கார் படத்தைத் திறந்து வைத்து அவரது அரும் பெரும் சேவையைப்பற்றிப் பேசினுர்கள். அதன் பின் தலைவர் ஆ. ரத்தினம் தாழ்த்தப்பட்ட மக்களின் நிலை அரசியலாரின் ஐந்தாண்டுத் திட்டத்திலுள்ள குறைகள் போன்ற பல காரியங்களைப் பற்றி சுமார் 2 மணிநேரம் சொற்பொழிவாற்றினுர்கள். பல சமுதாயச் சங்கங்களின் சார்பாக தலைவருக்கு மலர் மாலைகளும் வரவேற்புப் பத்திரங்களும் அளிக்கப்பட்டன.

பிறகு ரத்தினம் அவர்கள் டாக்டர் அம்பேத்கார் அவர்களை நேரடியாகச் சந்தித்து சுமார் 2 மணி நேரம் பேசினுர்.

*

திருநெல்வேலி ஜில்லா ஆதி திராவிட மகாஜன சங்கம் பம்பாய் கிளையின் சார்பாக 21-4-55-ல் மாலை 7-மணிக்கு பொதுச்செயலாளர் ஏ. பி. ஏசுதாசன் அவர்களால் கூட்டத்தை துவக்கி வைக்கப்பட்டு, வி. எஸ். டி. ராஜா அவர்களின் வரவேற்புரையுடன் சங்கத் தலைவர் ம. ப. மந்திரமூர்த்தி அவர்கள் தலைமையில் மிக சிறப்பாக கொண்டாடப்பட்டது.

அதுசமயம் சு. வள்ளிநாயகம் அண்ணல் அம்பேத்கார் அவர்களின் உருவப் படத்தை திறந்து வைத்து டாக்டர் அம்பேத்கார் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு செய்த அரிய சேவைகளைக்குறித்தும் அவரின் அறிவுத் திறனைக் குறித்தும் அரியதோர் சொற்பெருக்காற்றினுர்.

அடுத்து தோழர்கள் எ. எல். பெருமாள், ஆ. கமலநாதன், கே. எம். விஸ்வநாதன், ஆர். ஆர். காம்ளே ஆகியோர்கள் அண்ணல் அம்பேத்கார் அவர்களின் சேவையைப் பற்றியும் திருநெல்வேலி ஜில்லா ஆதிதிராவிட மகாஜன சங்கம் இயங்கி வரவேண்டிய அவசியம் குறித்தும் நல்லதோர் விளக்கவுரையாற்றிய பின், பம்பாய் பிரதேச தாழ்த்தப்பட்டோர் சம்மேளனத் தலைவர் ஆர். டி. பண்டாரே M. A. L. L. B. அவர்கள் இந்தியில் அரியதோர் சொற்பொழிவாற்றினுர்.

### சங்கர நயினுர் கோவில் கைத்தறி நெசவாளர் சங்கம்

●

சங்கர நயினுர் கோவில் கைத்தறி நெசவாளர் சங்க பொதுக் கூட்டம் 6—4—55-ல் திருவேங்கிடம் சாலைத் தெருவில் புளியங்குடி பஞ்சாயத்து தலைவர் எஸ். சோமு தலைமையில் நடைபெற்றது. நெசவாளர் நிலையைவிளக்கி உடனடியாக கூலி கூடவேண்டிய அவசியம் பற்றி தோழர்கள் அ. நராயணன், சூ. சங்கர சுப்பிரமணியம், இரா. பழனிவேலு, (தி. மு. க.) விளக்கமாக பேசினுர்கள். முடிவில் நகரில் உள்ள எல்லா மாஸ்டர் வீவர்களையும் பேட்டி கண்டு கூலியை கூட்டிக் கொடுக்க வேண்டியஅவசியத்தை வற்புறுத்தி கேட்பதற்கு நகர தி. மு. க. செயலாளர் டி. ஆர். சுப்பிரமணியம் தலைமையில் 5 பேர்கள் கொண்ட கமிட்டி ஏகமனதாக தேர்ந்தெடுக்கப்பட்டபின் செயலாளர் எஸ், எம். திருவுடையான் நன்றிகூற கூட்டம் முடிவுற்றது.

#### மாஸ்டர் வீவர்களிடம் தூதுக் குழுவினர்

9—4—56-ல் டி. ஆர். சுப்பிரமணியம் தலைமையில் தனித்தனியே எல்லா மாஸ்டர் வீவர்களையும் நேரில் கண்டு கூலி கூட வேண்டிய அவசியத்தை எடுத்து சொல்லியதற்கு 14—4—55 எங்கள் (மாஸ்டர் வீவர்) சங்கத்தை கூட்டி ஆவனசெய்கிருேம் என்று உறுதி கூறினுர்கள்.

#### கூலி உயர்வு

14—4—55-ல் சங்கத்தை கூட்டி தற்சமயம் கொடுத்துவந்த கூலியில் பாவு ஒன்றுக்கு (ஒரு ரூபாய்) 1—0—0 கூட்டி இருக்கிருேம் என்று தோழர் டி. ஆர். சுப்பிரமணியத்திடம், மாஸ்டர் வீவர் சங்க செயலாளர் வீ. ச. அருணுசலம் தெறிவித்தார்.

#### கூலி காணுதது

தற்சமயம் கொடுத்துவந்த கலர் பொந்து பாவு ஒன்றுக்கு ரூபாய் 18—0—0 — ஆதோணி பாவு ஒன்றுக்கு 15—0—0 ஆனுல் கேட்ட கூலி ரூ. 22—0—0-ம் 18—0—0-ம் இப்போது கூட்டியிருக்கும் கூலி ரூ. ஒன்றுதான். ஆனுல் இந்த கூலி மிகவும் மோசமான கூலி. ஆகையால் மேலும் தொடர்ந்து போராட்டம் நடந்து கொண்டே இருக்கும். கூடுதலாக கூலி கேட்டு எல்லா மாஸ்டர் வீவர்களும் முன்வந்து கலர் பொந்து பாவு ஒன்றுக்கு ரூ. 22—0—0-ம் ஆதோணி பாவு ஒன்றுக்கு ரூ. 18—0—0-ம் கூலியை உயர்த்திக்கொடுக்க கேட்டுக் கொள்கிருேம், என்று தூதுக் குழுத் தலைவர் டி. ஆர் சுப்பிரமணியம் அறிவிக்கிருர்.

திராவிடன்

சென்னை : 6—5—55 : வெள்ளி

## அன்றும் - இன்றும்

1949-ம் ஆண்டு, திராவிட முன்னேற்றக் கழகத்தை அறிஞர் அண்ணா அவர்கள் தோற்றுவித்தபோது அவசர ஆருடம் கணித்தவர்கள் பலபேர்; தி. மு. கழகமாவது முன்னேற்றமாவது எல்லாம் அற்பாயுசுதான் என்று சபித்தார்கள் சிலர்; அசகாய சூரர்களால் முடியாத காரியம், இந்த அண்ணாதுரையால் முடியுமா எல்லாம் ஹம்பக் என்று திருவாய் மலர்ந்தருளினர் மற்றும் சிலர்; கையிலே காலணா இல்லாததுகளுக்கு தனிக் கழகமாம் அமைப்பாம்; என்று வேதாந்தம் பேசியவர்களுமுண்டு,

அன்று—தி. மு. கழகம் தோற்றுவிக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்ட அன்று நமது அண்ணா அவர்களும் மற்ற நண்பர்களும் ஆண்டிப் பண்டாரங்கள் கதைபோல மனதால் எண்ணிய—அந்த எண்ணத்தை நிறைவேற்ற வசதியில்லையே என்று ஏங்கிய சம்பவங்களை இன்று நினைத்துக் கொண்டால் நம்மையும் அறியாமல் சிரிப்புத்தான் வருகிறது.

ஆம் அன்று கண்ணீர் சிந்தினோம்—அவரவர்கள் சொந்த வாழ்விலே ஏற்படும் அதிர்ச்சிகளுக்குக்கூட கண்ணீர் சிந்தியறியாத மன உறுதிபடைத்த தோழர்கள் அன்று 1949-ம் ஆண்டில் கண்ணீர் சிந்தினர். மாற்றுக் கட்சியினரால் நையாண்டி செய்யப்பட்டனர்; சுயமரியாதை இயக்கத்தின் தோற்றமும் கடவுள் திருவிளையாடல்களில் ஒன்று எனவே அந்த இயக்கம் விரைவில் மறைந்து போனால் ஆச்சரியப்படுவதற்கில்லை என்று குதிப்பாட்டம் போட்டுப் பேசினர் குல்லுகபட்டர் ஆச்சாரியார் கூட!

1917-ம் ஆண்டு வெண்ணுடை வேந்தன், தன்னலமற்ற தியாகி, திராவிடத்தின் மகத்தான தலைவர் சர். தியாகராயர் அவர்களாலும் திராவிடத்தின் செல்வங்களான டாக்டர் நடேசனார், டாக்டர் நாயர் போன்றவர்களாலும் தோற்றுவிக்கப்பட்ட சுதந்திரக் குடிசை கோட்டையாக வளரவேண்டும் என்பதற்காக அவர்களைத் தொடர்ந்துவந்த லட்சிய வீரர்களின் தன்னலமற்ற தொண்டும் கேலிச் சித்திரமாக மாறிவிடுமோ என்று நாம் 1949-ம் ஆண்டிலே அஞ்சினோம், தடுமாறினோம் சுருக்கமாகச் சொல்ல வேண்டுமானால் நமது சக்தியே நம் கண்களுக்குப் புலப்பட முடியாத அளவுக்கு மனவேதனைப் பட்டோம்.

ஆனால் இன்று 1955-ம் ஆண்டு காண்பதென்ன? சர். தியாகராயர் போன்ற மாபெரும் தலைவர்களால் உருவாக்கப்பட்ட திராவிடத்தின் சுதந்திரக் குடிசை (பார்ப்பனரல்லாதார் இயக்கம்) பெரியார் அவர்களால் பாதுகாக்கப்பட்டு இடையே அப் பாதுகாப்பிலே சற்று கவனக்குறைவு ஏற்பட்டாலும் அப்பணியைத் தொடர்ந்து செய்து திராவிடத்தின் கோட்டையாக அமைப்போம் என்று நமது அண்ணா அவர்கள் அன்று ஆறுதல் கூறினர்.

ஏசல் மொழிகளையும் தூற்றுதலையும் பிள்ளையைக் கிள்ளிவிட்டு தொட்டிலாட்டும் விசித்திரப் பிறவிகளின் கோணங்கித் தனங்களையும் சகித்துக் கொண்டு நமக்கு வழிகாட்டினர், அறிவுரை தந்தார் அண்ணா.

மாவீரர் தியாகராயர் கண்ட கொள்கைக்கு தி. மு. க. என்ற அஸ்திவாரத்தை அமைத்து எழில்மிகு கோட்டையாக அமைக்கும் பணியில் ஈடுபட்டார். அமைப்பு முறையை வகுத்தார். திராவிடர் இயக்கம் 1949-ம் ஆண்டோடு அழிந்துவிடும் என்று முடிவு கட்டிய அரசியல் யூகமற்றவர்கள் திணறும் வகையில் தி. மு. கழகத்தைத் தம்பிமார்களின் துணையையும் ஏழை நடுத்தர மக்களின் பொருளுதவியையும் கொண்டு உருவாக்கினர். திராவிடத்தின் உண்மையான விடுதலைப் போராட்ட ஆரம்பப் பணிகளில் தி. மு. கழகத்தை ஈடுபடச் செய்தார். தென்னாட்டு அரசியல் வரலாற்றிலே இதுவரை இடம் பெறாத அளவுக்கு ஆதிக்க வெறியர்களின் அடக்குமுறை புறமுதுகிட்டோடச் செய்தார்.

தி. மு. கழகம் துவக்கப்பட்ட காலத்தில் ஒரு நூறு ரூபாய்கூட அதற்கு சொத்து இல்லாமலிருந்த அவல நிலையை மாற்றி கூடுமான அளவு தன் காலிலேயே தான் நிற்கும் தகுதிக்கு தி. மு. கழகத்தை வளர்த்தார். உடல் நலிவுற்ற நேரங்களிலும் ஓய்வு பெற எண்ணவில்லை. சிறை செல்லவும் அஞ்சவில்லை. கடமையாற்றவும் சளைக்கவில்லை. இன்னும் சொல்லப்போனால் கடந்த 6 ஆண்டுகளாக பம்பரம் போல சுற்றிப் பணியாற்றினர் அண்ணா அவர்கள். மற்றவர்களைப் பணியாற்றவும் கழக நடவடிக்கைகளிலே பங்கு பெறவும் கழகத்தை நடத்திச் செல்லும் திறமை பெறவும் செய்தார்.

கடந்த 6 ஆண்டுகளிலே இருமுறை கழகத் தேர்தல்கள் நடைபெற்றன. முதலில் நடைபெற்ற தேர்தல் முறையைவிட இரண்டாவது நடைபெற்ற கழகத்தேர்தலில் ஜனநாயகப் பண்பினை மேலும் மேலும் வளரச் செய்தார். எல்லா பொறுப்புகளையும் தன்னிடமே குவித்து வைத்துக்கொண்டு அரசியல் கட்சியை சொந்தக்கடை போன்று பாவிக்காமல் யாரும் எந்த நேரத்திலும் கட்சியை நடத்திச் செல்லும் திறமை பெற்றவர்களாக பயிற்சிவித்தார். மூன்றும் முறையாக சென்ற மாதம் கழகப் பொதுத் தேர்தல்கள் இனிது நடைபெற்றன. எனவே அப்பொறுப்பினைத் தம்பிமார்கள் எப்படி நடத்துகின்றனர் பார்க்கலாம். தவறிருப்பின் திருத்தலாம், உடனிருந்து யோசனை கூறி கட்சியை வளர்க்கும் கடமை வீரர்களாகப் பலரை உருவாக்கலாம் என்று எண்ணி இத் தேர்தலில் அண்ணா அவர்கள் தாம் இதுவரை வகித்து வந்த பொதுச் செயலாளர் பொறுப்பை மற்றவர்கள் ஏற்று நடத்த வேண்டும் என்று மனதார விரும்பினார்கள். அண்ணா அவர்கள் அவரது பொதுப்பணியின் துவக்ககாலத்திலேயிருந்து வளர்த்து வந்துள்ள இப்பண்பினை தி. மு. கழகத்தினர் மட்டுமல்லாமல் மற்ற அனைவருமே பாராட்டவும் அவரது பண்பிற்குத் தலைவணங்கவும் செய்வர் என்று கூறின் மிகையாகாது.

ஆனாலும் அவர்களின் இவ்வுயரிய பண்பினைப் புரிந்துகொள்ளும் மனவளம் பெறாத சிலர் பொதுச்செயலாளர் பதவியின் காரணமாக தி. மு. கழகத் தலைமையிலே தகராறு ஏற்படும், அதனால் தி. மு. கழகமே சீர்குலைந்துவிடும் என்று மட்டரகச் சிந்து பாடினர். அத்தகைய பிறவிகளும் தெளிவுபெறும் வண்ணம் 24-4-55-ம் நாளன்று தி. மு. கழகப் பொதுக்குழு உறுப்பினர்கள் ஒருமித்த ஆதரவுடன் நமது அருமைத் தோழரும், இதுவரை துணைச் செயலாளரா யிருந்து பணியாற்றி வந்தவருமான நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள் பொதுச் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவருக்கு நமது மனமார்ந்த பாராட்டுதலையும் வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

நிற்க, பொதுச்செயலாளர் நெடுஞ்செழியன் அவர்கள் தாம் மேற்கொண்டுள்ள பொறுப்பை இனிது நிறைவேற்ற கழகத் தோழர்களும் கிளைக் கழக நிர்வாகிகளும் அதற்கேற்ற கட்டுப்பாடான ஒத்துழைப்பைத் தந்து அறிஞர் அண்ணா அவர்களின் அரிய யோசனையின் துணைகொண்டு திராவிடத்தின் விடுதலைப் பணியில் மேலும் முன்னோக்கிச் செல்ல வேண்டிக் கொள்கிறோம்.

## பாராட்டுகிறோம்.

இசையரசு எம். எம். தண்டபாணி (தேசிகர்) அவர்கள், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் இசைப் பேராசிரியராகவும், இசைத் துறைத் தலைவராகவும் நியமிக்கப்பட்டிருக்கிறார், இசையரசு அவர்களின் தமிழ் இசையைக் கேளாதார் நாட்டிலே யாருமே யிருக்கமாட்டார்கள், தமிழிசைகளை உணர்ச்சி ததும்பப் பாடி நற்புகழ் பெற்றிருப்பவர், தமிழ் இசையே இனிமையும் சிறப்பும் பெற்றது என்பதை நிரூபித்துக் காட்டியவரும் அவரே, தமிழிசைக்காகவும் தமிழுக்காகவும் அவர் செய்த தொண்டு அளவிடற்கரியது

தமிழர்களது கல்வி வளர்ச்சியில் அக்கறை கொண்ட இசையரசு அவர்கள் கல்லூரி வசதியேயில்லாதவண்ணையம்பதியில் வெண்ணுடைவேந்தர் தியாகராயர் அவர்கள் பெயரில் ஒரு முதல்தரமான கல்லூரியை தோற்றுவிக்க எடுத்துக் கொண்ட முயற்சியானது அவரது சேவைகளுக்கு சிகரம் அமைத்தது போன்றதாகும்,

இசைத் துறையில்எழில் மணம் பரப்பிவரும் இசையரசு அவர்கள் இசைப் பேராசிரியராகவும் இசைத் துறைத் தலைவராகவும், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் நியமிக்கப்பட்டிருப்பதுபற்றி நாம் மகிழ்கிறோம், இத்தகைய சிறந்ததொரு பதவியை அளித்து இசைத் தமிழை இன்னும் முன்னேற்றுவிக்க வாய்ப்பினை ஏற்படுத்திக் கொடுத்து இசையரசு அவர்களை ஊக்குவித்ததற்காக அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தினரையும் ராஜா சர் முத்தையா அவர்களையும் நாம் மனமாரப் பாராட்டுகிறோம்.

இசையரசு அவர்களும் இந்த வாய்ப்பினைப் பயன்படுத்தி இசைத் தமிழுக்கு முன்னிலும் சிறந்த சேவையைச் செய்ய வேண்டுமாறு கேட்டுக் கொள்கிறோம்

**புட்பவல்லி—சாமிக்கண்ணு திருமணம்**

13-5-55 காலை 7 மணிக்கு திருவெண் காட்டில் தோழர் ஆ. சாமிக்கண்ணு—புட்பவல்லி ஆகியோருக்கு தோழர் செ. கூத்தன் தலைமையில் திருமணம் நடைபெறும். தோழர்கள் இராமையா, டி. வி. சம்பத், எ. இப்ராகிம்சா பேசுவர்.

## நடக்க இருப்பவை

**சென்னை முத்தமிழ் மன்றம்**

முத்தமிழ் மன்றத்தின் சார்பாக மாபெரும் பொதுக் கூட்டம் 6-5-55 வெள்ளி மாலை 6 மணிக்கு பெத்துநாயக்கன் பேட்டை காசிவிசுவநாதர் கோயில் திடலில் பன்மொழிப் புலவர் கா. அப்பாதுரையார் தலைமையில் நடைபெறும். நாவலர் இரா. நெடுஞ்செழியன், சி, ஆர். பாலசுந்தரம் ஆகியோர் பேசுவர்,

**மதுரை மாவட்ட தி, மு, க,**

8-5-55 ஞாயிறு காலை 10 மணிக்கு திருப்பரங்குன்றம் பஸ் நிலயத்திற்கு அருகில் உள்ள மடத்தில் நடைபெற இருக்கும் மாவட்ட செயற்குழு கூட்டத்திற்கு செயற்குழு உறுப்பினர்கள் வருகைதருமாறு மதுரை மாவட்டச் செயலாளர் எஸ். முத்து தெரிவித்துக் கொள்கிறார்,

**பெங்களூர்**

பெங்களூர் மக்கள் மறுமலர்ச்சி மன்ற சார்பில் 2499 வது புத்தர் ஆண்டுவிழா 8—5—55 அன்று மாலை 5 மணிக்கு ஆற்காடு நாராயணசாமி அவர்கள் உயர்நிலைப்பள்ளி மைதானத்தில் தோழியர் எஸ், கே, ஜெகதீஸ்வரி தலைமையில் நடைபெறும், தோழர்கள் கவிஞர் எம், எஸ், ராமசாமி பண்டிதர் ஜி. அப்பாதுரையார் ஆகியோர் சொற்பொழிவாற்றுவர்,

**திருப்பத்தூர் (வ. ஆ) பகுத்தறிவு மன்றம்**

8—5—55 காலை 9 மணிக்கு திருபத்தூர் (வ, ஆ,) நியூசினிமா தியேட்டரில் பகுத்தறிவு மன்ற சார்பாக திரு, வி, க, மணிமண்டப நிதியளிப்பு விழா திரு இ, எல், இராகவனார் எம், எல்; ஏ, தலைமையில் நடைபெறும், தோழர்கள் கி, ஆ. பெ, விஸ்வநாதம், கவிஞர் கண்ணதாசன், டாக்டர் டி., இராமசாமி ஆகியோர் பேசுவர்,

**சென்னை மாவட்ட தி. மு. கழகம்**
**நிர்வாகக் கமிட்டி கூட்ட அழைப்பு**

★

8—5—55 ஞாயிறு பிற்பகல் 3-மணிக்கு இராயபுரம் அறிவகத்தில் சென்னை மாவட்ட தி, மு,.கழக செயற்குழுகூட்டம் நடைபெறும் மாவட்டக் கழக உறுப்பினர்கள் அனைவரும் தவறாது வருகைதர வேண்டுகிறேன்.

இளம்பரிதி, செயலாளர்





# மாமேதை ஈன்ஸ்டீன்!

உலக மாமேதை, விஞ்ஞானப் புகழ், **டாக்டர் ஆல்பர்ட் ஈன்ஸ்டீன்**, தமது 76-வது வயதில் எதிர்பாராவண்ணம் மாண்டார்! ஏப்ரல் 18, 1955 அவரது முடிவு நாளாக வந்துற்றது. கடந்த வெள்ளியன்று பித்த நீர்ப்பைக் கோளாறு என்பதாக மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டார். உயிருக்கு ஆபத்து என்று எவரும் நினைக்கக்கூடவில்லை! ஆனால் நுணுக்க ஆராய்ச்சியின் பயனாய் அவருக்கு பித்த நீர்ப்பை கோளாறு அல்ல. முக்கிய இரத்தக் குழாய் வெடித்து உடல் பூராவும் இரத்தந் தோய்ந்து உயிர் துறந்தார் என்பதாகக் கண்டார்கள், அவர் சாகும்போது அவர் சிகிச்சை பெற்ற மருத்துவ மனையிலேயே வேறொரு பகுதியில் தமது ஒரே மகள் **மாருட்** என்பவரும் சிகிச்சைக்காக அனுமதிக்கப்பட்டிருந்தார்.

அந்த அம்மையார் வீட்டில் தான் நியூஜெர்சியிலுள்ள பிரின்சிடன் ஊரில் ஈன்ஸ்டீன் தமது கடைசி காலத்தைக் கடத்தி வந்தார். அதே ஊரில்தான் ஒரு விஞ்ஞானக் கழகத்தில் ஆராய்ச்சியை தொடர்ந்து நடத்தி வந்தார்.

ஈன்ஸ்டீன் யூதர் வகுப்பைச் சேர்ந்தவர். ஜர்மனியில் உல்ம் என்னும் ஊரில் 1879-ம் ஆண்டு தோன்றினர். பள்ளிப் பருவத்தில் பள்ளிக்கூட விதிமுறைகளுக்குப் பணிய மறுத்தார். ஆசிரியர்களைப் பலவிதமான சிக்கல் கேள்விகளைக் கேட்டுத் திணரடித்தார்.

அதனால் ஆசிரியர்கள் அவரை வெறுக்கலானார்கள். ஆனால் அவரது 14-ம் வயதிலேயே தாமே கணித புத்தகங்களைப் படித்து கணிதமேதையாவதற்குவித்தூன்றிக் கொண்டார், அவரது தாய் தந்தையர் ஸ்விட்சர்லாந்து வந்து வாழ நேர்ந்தது, அது போது அங்கே ஆருவிலுள்ள தொழிற் பள்ளியில் படிக்கலானார். பிறகு ஜுரிச்சிலுள்ள தொழிற் கலைக் கல்லூரியில் பயின்றார். கடைசியில் 1901-ல் ஒரு போதகாசிரியராகத் திகழ்ந்தார். பரீட்சைத் தாள் கண்காணிப்பவராகவும் பணியாற்றினர். இத் தருணந் தான் அவரது நீங்கா ஆராய்ச்சியாம் "தொடர்பின் தத்துவம்" என்பதைப்பற்றி ஆராயலானார் அதில் "காலம்" அதாவது நேரம் என்பதற்கும் மற்றவற்றிற்கும் என்ன தொடர்பு என்பதனை எடுத்து விளக்கினர். நீளம்—அகலம்—விசாலம் என்னும் மூன்றினோடு நேரத்தையும் பொருத்தி பலப்பல கணிதங்களை இயற்றி உலகையே வியக்கச் செய்தார். அது சம்பந்தமாக 1905 லேயே உலகம் பூராவும் தனது கணிதத் தத்துவம் பரவும்படி விளம்பரப் படுத்தினர். அதிலிருந்து அவரது புகழ் விஞ்ஞான உலகமனைத்துக்கும் பரவி ஓங்கி நின்றது.

ஜுரிச் பல்கலைக் கழகமும் அவருக்கு **தத்துவத்துறை ஆராய்ச்சி நிபுணர் (Ph. D.)** பட்டத்தை வழங்கி பெருமை படுத்திற்று, அதோடு அதே கல்லூரியில் சூட்டின் தன்மைகளை விளக்கிடும் பேராசிரியராகவும் அவரை அமர்த்திக் கொண்டது,

1908-ம் ஆண்டு ஆஸ்டிரியா சென்று அவரது ஆற்றலை அனைவரும் காணும்படிச் செய்தார். அவரது ஆற்றலைப் போற்றி 1911—12-ல் பராகுவேயிலுள்ள ஜர்மனி பல்கலைக் கழகம் அவரை விஞ்ஞானப் பேராசிரியராக அமர்த்திக் கொண்டது. அதோடு அவரது பெருமையைப் போற்ற "ஈன்ஸ்டீன் கோபுரம்" ஒன்றும் கட்டினார்கள். ஆனால் ஒன்றரை வருடங்களில் அவரை மீண்டும் ஜுரிச் பல்கலைக் கழகம் திருப்பியழைத்துக் கொண்டது. ஜர்மனி அவரை விடுவதாக இல்லை. பெர்லினிலுள்ள ப்ரஷ்யன் விஞ்ஞானக் கழகம் அவரை அணைத்துக் கொண்டது. 1914-ல் இருந்து 1923-வரை அங்கேயே பணியாற்றினர்.

1921-ல் அவரது புகழுக்கெல்லாம் சிகரமாக "நோபல் பரிசும்" அவரை நாடி வந்தது! அவருக்குக் கிடைத்த தங்க பதக்கங்களும், மற்றவித பரிசில்களும் கணக்கிலடங்கா!

ஈன்ஸ்டினுக்கு 1933-ம் வருடம் பேரிடியாக வந்துற்றது! இட்லரைத் தலைவராகக்கொண்ட நாஜிகளின் கொடுமைகள் ஏட்டிலடங்கா! அதிலும் யூதர்களை வேட்டையாடுவதென்றால் கூறத் தேவையில்லை!

பாவம்! ஈன்ஸ்டீன் ஒரு யூதராகப் பிறந்து விட்டார்! 'அன்னது அவர் செய்த குற்றமன்று!' என்று இட்லர் தர்பாரில் எவரே கருதுவர்?

யூதரை விரட்டிடுங் கொடுமை கடுமையிலுங் கடுமை!

ஈன்ஸ்டீனது குடி உரிமை பறிக்கப்பட்டது! விஞ்ஞானக் கழகத்திலிருந்து 'கல்தா' கிடைத்தது! அவரது வீடு போர்க் கருவிகள் கிடங்காக மாற்றப்பட்டது! பேராசிரியர் பதவியெல்லாம் பட்டம் பறந்தன! இருபதினாயிரம் (20,000) "மார்க்" காசுகள் பெருமானமுள்ள வீடு, வாசல், உடமை உரிமை யெல்லாம் பிடுங்கப்பட்டு நாஜிகளால் நாடு கடத்தப்பட்டார்!

விஞ்ஞானியா யிருந்தாலென்ன? யூதனுச்சே! அறிவின் சிகரமாயின் என்ன? யூதனுச்சே! என்று ஓடோட விரட்டினர் ஈன்ஸ்டீனை நாசகார நாஜிகள்!

வெறுங்கையுடன் ஓடினர்! ஓடினர்! பிரஞ்சு நாடு புகுந்தார்! பெல்ஜியம் போய்ப் பார்த்தார், பிறகு இங்கிலாந்திலும் இறங்கினர்! "உண்டோ குரங்கேறுக் கொள்ளாத கொம்பு? என்றபடி நியூஜெர்ஸியிலுள்ள பிரின்சிடனில் அடைக்கலம் புகுந்தார். பிரின்சிடனிலுள்ள-சீரிய ஆராய்ச்சிக் கழகமொன்றுஅவரை வாழ்நாள் முழுமைக்குமாக பேராசிரியர் பதவி வகிக்குமாறு கோரிற்று! அங்ஙனமே அவர் ஒப்புதல் தெரிவித்து பல்லாண்டு பணிபுரிந்து 1945-ல் ஓய்வு பெற்றுக் கொண்டு தாம்மேற்கொண்ட கணித ஆராய்ச்சிக்கு தத்துவத்தை அலசிடும் பணியில் ஈடுபட்டார்.

அக்டோபர் 1940-ல் அமெரிக்கக் குடிமகனாக தம்மை பதிவு செய்து கொண்டார்.

**அணுசக்தியின் சூட்சமங்களை முதன் முதலில் வெளியிட்டவர் ஈன்ஸ்டினே ஆவார்.** அதை அமெரிக்கா பயன் படுத்திக் கொண்டது. ஜர்மனி கைநழுவவிட்டது!

அன்பு, அடக்கம், பணிவு ஆகியவைகளின் மறுபதிப்பாகத் திகழ்ந்து வாழ்ந்திட்டார் ஈன்ஸ்டீன். ஆழப் புதைந்த கண்கள், காற்றில் பறந்தாடும் தலையின் வெண்மயிர், தொங்கி வழிந்திடும் மூக்குக் கண்ணாடி, அக் கண்ணாடி இடுக்கில் புருவம் நெறித்துப் பார்க்கும் பார்வை, சுருக்கம் நிறைந்து படர்ந்த நெற்றி—அடர்ந்த மீசை அவரது தோற்றம்! உள்ளமும் அறிவும் எழிலுற்றபோது உடலழகு எப்படி இருந்திட்டென்ன?

கடவுள் விஷயத்தில் சற்று 'ஜாக்கிரதை' கொண்டவர்.

**இவ்வுருவில் தான் உள்ளார் கடவுள் என்பதை ஒப்ப மறுப்பவர்! மனிதன் இறந்தால் ஆத்மா இறந்துப்டாது வேறு உடலில் புகுகிறது என்பதை ஒப்ப மறுத்தவர். அவ்வளவு ஏன்? அவர் ஒரு படித்த அறிவுள்ள நாஸ்திகர்! 'சு. ம!'**

அவர் விழைந்ததெல்லாம் மனித அபிமானம்! ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுக்குந் தன்மை! சகிப்புத் தன்மை! சுதந்தரம்! ஆகியவையவளேயாகும்.

அத்தகைய நல்லுள்ளம் படைத்தவர்! அணுசக்தியின் இரகசியத்தை வெளியிட்டவர்! மாமேதை! விஞ்ஞானி! மறைந்தார் என்றால் யாருக்குத்தான் பரிவும் வருத்தமும் பிறக்காது? உலகம் ஒரு மேதையை இழந்து ஈடு செய்ய முடியா நட்டத்தை அடைகிறது!

அவரது முதல் மனைவிக்குப் பிறந்த இருமகனார்களும். இரண்டாவது மனைவிக்குப் பிறந்த இரு மகளிர்களில் ஒருவர் மறைந்துவிட மற்றவர் உளார், அவர்தான் மேலே குறிப்பிட்ட **மாருட்** என்பார் என்பதாகவும் காணக்கிடக்கிறது. அவர்களுக்கு ஈன்ஸ்டீனது பிரிவாற்றாமையை இதன் மூலம் தெரிவித்துக் கொள்வோமாக!

வாழ்க ஈன்ஸ்டீன் புகழ்!

—டபிள்யூ பி. டி. எழிலன்

●

## "விந்தையான வேண்டுகோள்!"

இந்துவில் ஒரு செய்தியின் தலைப்பு இது.

அவன் வாலிபன். பல நாள்—இருபத்தி ஒருமுறை—முயன்றான் ஹைதராபாத் முதல் அமைச்சரைக்காண இயலவில்லை. இறுதியாகப் பேட்டி கிடைத்தது. பேட்டியில் முதல் அமைச்சரிடம் தன் வேண்டுகோளை விடுத்தான்.

வந்த வாலிபன் முற்றும் அப்பாவி என்று எண்ணவும இடம் தரவில்லை அவன் செய்கைகள். அமைச்சனாக என்ன தகுதி என்று அவன் கருதினானோ அவைகளுடன் தான் முதல் அமைச்சரைக் கண்டிருக்கிறான்.

கதர் குல்லாய்; ஷெர்வானி, பைஜாமா, — இவை அவன் கோலம்,

உலாவரும் அமைச்சரை போல உடுப்புக்கள் அவன் கண்களில் அமைச்சர்களின் தகுதி அவை மட்டுமே என்று எண்ணி இருக்கின்றான்.

'என்னை சட்ட சபை உறுப்பினனாக நியமியுங்கள்.'

'ஏன்?'

'நான் மந்திரி சபையில் உறுப்பினனாக வேண்டும் அதற்காகத் தான்'

அவன் வேண்டு கோளைக் கேட்டு முதல்வர் வியப்பெய்தினாராம். தனக்கு அவ்வாறு செய்ய அதிகாரம் இல்லை என்று சொன்னாராம். சொன்னதோடன்றி அவன் அமைச்சனாவதற்கும் வழி சொல்லி இருக்கின்றார். காங்கிரஸ் தலைவரிடம் சென்று தேர்தல் சீட்டு பெறச் சொல்லி இருக்கின்றார்.

நியாயமான வழி நேர்மையானதுதான். பாராட்டவேண்டும், நாம். சட்டப்படி வழி கூறினாரே என்று.

நாட்டு நிலை இதுவாயின் 'விந்தையான வேடிக்கை' என்று இந்து தலைப்பு கொடுப்பதில் தவறு ஏதும் இல்லை.

ஆனால்...

நாட்டிலே இந்த நிலை இல்லை என்பதனை எண்ணும்போதுதான் தலைப்பின் தகுதி கேலியாகிறது.

'அவர் எப்படி முதல் அமைச்சர் ஆவது? அவர்தான் தேர்தலில் நிற்கவே இல்லையே?

ஏன் அவரை மேல் சபையில் உறுப்பினராக நியமித்து விட்டால் சரியாகிறது.

'அப்படியானால் செய்யுங்கள்'

உடனே திரு...இன்னார் முதல் அமைச்சர் என்று அறிவிக்கின்றார்கள்.

ஒருவர் விரும்பினால் ஒருவரை நியமிக்கும் உறுப்பினராக்கி அமைச்சராக—முதல் அமைச்சராக—ஆக்க முடிகின்றது, ஒரு இடத்தில்.

வேறு இடத்தில் அப்பாவிக்கு வழி காட்டுகின்றார்கள், சட்டம் சொல்கின்றது என்று,

இந்துவுக்கு ஒன்று அரசியல்; மற்றது 'விந்தையான வேண்டுகோள்'

**விந்தையான பத்திரிகை!**

—"தூ"

●

## வரவேற்போம்!

இந்துவாக, அதிலும் அரிஜனுகப் பிறந்து இத்தனை காலம் வெளிர்ந்து நிமிர்ந்து வாழ்ந்துவிட்ட போதிலும் இனியும் அந்நிலையில் வாழ விரும்பாது டாக்டர் பி. ஆர். அம்பேத்கார்—தானும் தனது மனைவியும் சமீபத்தில் நடக்கவிருக்கும் புத்தர் பிரானது 2500-ம் ஆண்டு விழாவின்போது புத்த மதத்தைத் தழுவப் போவதாக வந்த செய்தியை 22-4-55 தேதியிட்ட 'திராவிடனி'ல் படித்தோம்!

அம்பேத்காரைப் பின் தொடர்ந்து, பூனுவில் இயங்கிவரும் தாழ்த்தப்பட்ட சம்மேளனத்தைச் சேர்ந்த பெரும்பான்மையான மக்களும் இந்துமதத்திற்குப் பெரிய தலைமுழுக்குப் போட்டு, புத்தமதத்தைத் தழுவப் போகிறார்களென, பூனு நகராட்சி மன்ற உறுப்பினரும், உள்ளூர் தாழ்ந்த இனமக்களின் தலைவர்களில் ஒருவருமான தோழர் வி. பி. ராஜுபிலே என்பார் அறிவிப்புக் கூறுகிறார்!

மௌடீகத்தை அறவே வெறுத்து ஒதுக்கி, பகுத்தறிவுப் பாசறையில் புகவிருக்கும் தோழர்களை வாழ்த்துவோம்! வரவேற்போம்!

மாள்க மௌடீகம்! பரவுக பகுத்தறிவு!

*

## சாருவாகர் சாடுகிறார்!

ஏ! மதப் பித்தர்களே! குருட்டுக்குரு சீடர்களே! எங்களைத் தாக்குவதற்கு உங்களுக்கு அவ்வளவு துணிச்சல் எங்கிருந்து வந்தது! நாங்கள் செய்த குற்றம்தான் என்ன!

எனது மனைவி சாரிணி முற்போக்குக் குணம் படைத்தவள்! அவளை உங்கள் குரு பழித்தார்! இழித்துக் கூறினார்! அவளை விரட்டியோட்டிவிட்டு என்னை அவரிடம் வரச்சொன்னார்! அதற்கு அவர் கூறிய காரணம் யாது? பெண் மாயப் பிசாசு! பெண் ஜென்மமே பாபங்கப்பியது. பழி நிறைந்தது. சாணக் குவியலைக் கிளறக் கிளற சாணம்தான் கையில் தட்டும்! பெண்ணினுல் நாம் ஒன்றும் அடைய முடியாது! மாருக கேடுகள் நிகழும்! எனவே எனது மனைவி சாரிணியை விரட்டியடிக்கச் சொன்னார் உங்கள் குரு!

ஒப்பவில்லை! எதிர்த்தோம்! உடனே உங்கள் குரு கண்ணை உருட்டிப் பார்த்துச் சாரிணியைச் சுட்டெரித்து விடுவதாகப் பயமுறுத்தினார்!

சாரிணி சளைக்கவில்லை! இதோ! உங்கள் முன்னேயே நிற்கிறேன். என்னை விரட்டியடிக்க யாராலும் முடியாது. உங்கள் கண்களை விரித்து உருட்டிப் பார்த்து என்னைத் தீய்த்து விடுங்கள் பார்க்கலாம் என்று குருவெதிர் நின்றிட்டாள்! உங்கள் குரு மிரட்டினார்! கண்களை உருட்டினார். சாரிணி சிரித்தாள். 'பாச்சா' பலிக்காது, அவமானத்தால் அவதிப் பெருக்குற்றார் உங்கள் குரு. இரத்தக் கொதிப்போ! அவமானத்தின் அதிர்ச்சியோ! உங்கள் குரு புயலில் வேரோடு பெயர்ந்து விழும் நெடுமரமெனச் சாய்ந்து மூர்ச்சை யுற்றார்!

நடந்தது இவ்வளவு தானே! இதற்கு நாங்களென்ன செய்வோம்! எங்கள் மீது பாய நோக்கும் மிதித்த பஞ்சாங்கங்களே! முதலில் அப்பக்கம் திரும்பி நோக்குங்கள், முழுக் கிராமமே திரண்டெழுகிறது. கட்டாரியைக் காணுங்கள், கொலைவாளினைக் காணுங்கள்! உங்கள் எலும்புத் துண்டு ஒன்று மிஞ்சுமா? என்பதையும் நினைத்துப் பாருங்கள்! உயிர் தப்பி ஓடுங்கள்!......ஒரே ஓட்டம்!

சாரிணி! உனது தீரமே தீரம்! பெண்ணைப் பழிக்கும் பகல் வேஷக்காரர்களுக்குச் சரியான பாடம் கற்பித்தாய்! அறிவுள்ள உலகம் நம்பக்கமிருந்ததையுங் கண்டாயா!

அன்று நாம் காட்டில் கண்ட காட்சிக்கும், இக்காட்சிக்கும் இடையேயுள்ள ஒற்றுமையை பார்!

வேடுவர்கள் சிங்கவேட்டையில் முதலில் பெண் சிங்கத்தைக் கொல்லச் சென்றார்கள்! ஏன்? பெண் சிங்கம் மாண்டால் ஆண் சிங்கம் தன்னால் வந்து விழுந்து மாண்டு போகுமாம்! ஆண் சிங்கத்தை முதலில் கொன்றால் பெண் சிங்கத்தின் சீற்றத்தைச் சமாளிக்காமற் போய் வேடுவர்களின் உயிருக்கே ஆபத்து நேர்ந்து விடுமாம்!

அச்சிங்க வேட்டைச் சூட்சுமத்தை ஒத்திருக்கிறது இந்தக் குருவின் வாதம்! பெண் அபலை! பெண் பாபப் பிறப்பு! என்றெல்லாம் கூறி பெண்களை அவ்வாறே நம்பும்படிச் செய்து அதற்குப் பிறகு "பிராயச்சித்தமும்" எம்மிடமே இருக்கிறது. எமது காலடியில் விழுங்கள். உங்கள் பாபச் சுமைகளைப் போக்கி விடுகிறேன்! என்று வலை வீசுவார் குரு! அவ்வலையில் முதலில் பெண்கள் விழுந்துவிட்டால் ஆண்களை அடிமை கொள்வது மிகமிகச் சுலபம் என்பது குருவின் குறுக்கு வழி!

பெண் சிங்கத்தை முதலில் வேட்டையாடும் வேடுவனுக்கும், பெண்களுக்கு முதலில் வலைவீசிடும் குருவுக்கும் என்ன வித்தியாசமிருக்கிறது. சரி வா நம் பிரயாணத்தை தொடர்ந்து மேற்கொள்வோம்!

## சுவைத்துப் பாரீர்!

பெண் இல்லையேல் உலகேது! உயிரேது! அன்பேது! கடவுளேது! எல்லாம் பெண்ணுல்! எல்லாம் பெண்ணில்! அத்தகைய பெண்ணை, தாயை, தெய்வத்தைப் போற்றுங்கள்! போற்றுங்கள்!! போற்றுங்கள்!!!

—தமிழ்ப் பெரியார் திரு. வி. க.

பெண்களும் ஆண்கள் தாமும்<br>
பெருந் தமிழ் நாடு தன்னில்<br>
தன்கடல் நிகர்த்த அன்பால்<br>
சமானத்தார் ஆனார் என்றப்<br>
பண்வந்துப் பாயப் பருகுநாள் எந்நா [ளோ!

—புரட்சிக் கவிஞர் பாரதிதாசன்

மாதர் தம்மை இழிவு செய்யும்<br>
மடமையைக் கொளுத்துவோம்!

—பாரதியார்

*

## குற்றவாளி நால்வர்!

அட குரங்கே! ஒரு அரை நிமிஷம் வாலைச்சுருட்டிக்கிட்டு சும்மா இருக்க மாட்டாயா?...அது எப்படி! அதுதான் பிறவியிலேயே குரங்காச்சே! வாலை நீட்டாது சுருட்டிக் கொண்டால் அது எப்படி குரங்காகும்! எனவே அதற்கு 'சேஷ்டை' உடன் பிறந்தகொன்றாகும்! கொடுத்துப் பாருங்களேன் அதன் கையில் பூமாலை ஒன்றை! பூவிற்கும் நாருக்கும் என்ன தொடர்பு! பூவிற்கு நார் ஆதாரமா? நாருக்குப் பூ ஆதாரமா! பூ எப்படி ஆக்கப்பட்டு விரிந்து, மலர்கிறது! என்பன போன்ற ஆராய்ச்சியல் இறங்கி விடாதா! அத்தகைய ஆராய்ச்சிக்குணமும், உடல் அமைப்புகளும்—வால் நீங்கலாக—மனிதனை ஒத்திருப்பதால்தானே என்னவோ சார்லஸ் டார்வின் மனிதன்; குரங்கிலிருந்து உண்டானவன் என்னும் தத்துவத்தை உலகுக்கு உணர்த்தினர்!

நான்கு கால்களால் நடந்திடும் குரங்கு, நிமிர்ந்து நின்று முன்னங் கால்களைக் கையாக உபயோகித்து, வால் தேய்ந்து மறைந்து போய் இரு கால்களால் நடந்திட்டால் மனிதன் 'மாடல்'தானே! ஆகவேதான் மனிதனுக்கும் குரங்குக்கும் நெருங்கிய தொடர்பு ஏற்பட்டிருக்கிறது போலும்!

நாலு கால்களால் நடந்திடும் குரங்கிற்கும் இன்னும் மற்ற மற்ற பிராணிகளுக்கும் இயற்கையில் அமைந்த உடல்நலம், இருகால் மனித வர்க்கத்திற்கு இருப்பதில்லை என்பது இங்கு கவனிக்கத்தக்கதாகும்

நாற்கால் பிராணிகளுக்குத் தோன்றாத குடல் சரிவு, ஹெர்னியா என்னும் விரைவாதம், விரை வீக்கம், மூலம் என்னும் வியாதிகள் மனித வர்க்கத்திற்குத் தோன்றி பாடாய்ப் படுத்துகின்றன! நிமிர்ந்து நடப்பதன் விளைவுகள் அவை. அதனுல்......! அதனுல் நாம் மீண்டும் பின்நோக்கிச் சென்று குரங்காய்த் திகழ வேண்டுமென்று கூறவில்லை!

மனிதன் பேசுகிறான், குரங்கு பேசவில்லை. மனிதனுக்கு வாலில்லை, குரங்குக்கு வாலுண்டு. இவ்விரு வித்தியாசங்கள் தவிர மற்ற வித்தியாசங்களெல்லாம் அவ்வளவு பெரிய வித்தியாசங்களாகத் தோன்றுவதில்லை.

மனிதன் யாருமில்லா வேளையிலே பிறர் வீட்டில் நுழைந்து சூறையாடப் பார்க்கிறான். திருடனுகிறான்.

குரங்கும் ஏமாந்தால் பண்டங்களையோ, மற்றதுகளையோ தூக்கிக் கொண்டு ஓடிவிடுகிறது. ஆனுல் திருடன் எனப் பெயர் பெறுவதில்லை, குரங்காகவே இருக்கிறது.

தற்போது குரங்குகளும் திருடர்களாகப் பிடிபட்டு, போலீஸ் அதிகாரிகளால் அவைகள் மீது குற்றப் பத்திரிகையும் தாக்கல் செய்யப்பட்டிருக்கிறது!

கேளுங்கள் சேதியை :—கல்கத்தாவிலுள்ள டாக்டர் ஒருவர் அவசர அழைப்பு வரவே கதவைப் பூட்டிக் கொண்டு அவசரமாக வெளியே சென்று விட்டார்.

அவசரத்தில் அவரது மருத்துவ அறையின் சன்னலை சாத்தாது சென்று விட்டார்.

அச்சன்னலின் வழியாக நான்கு குரங்குகள் உள்ளே வந்து மருந்து புட்டிகளை ஆராய்ந்து பார்த்து—இழே ஊற்றி, புட்டிகளையும் உடைத்து இதர சோதனைக் குழாய், ஊசிபோடும் கண்ணடிக் கருவிகளும், இன்னும் மற்ற சாமான்களையும் உடைத்துவிட்டு அதோடு சில மருந்துகளையும் குடித்துவிட்டு ஓடி விட்டனவாம்.

வேலை முடிந்து திரும்பி வந்த டாக்டர் அறையைத் திறந்தார். ஏதோ பெரிய திருடுதான் நடந்திருக்க வேண்டுமென்றெண்ணிப் போலீசுக்குத் தகவல் கொடுத்தார் டாக்டர், போலீஸ் மும்முரமாகப் பரிசோதனை செய்ததில் அந்த நான்கு குரங்குகள் தான் திருடர்கள் எனக்கண்டு பிடித்ததோடு, கையோடு பிடித்துக் கொண்டும் வந்து விட்டார்கள் போலீஸ்காரர்கள்; பிறகு அவர்கள் முறைப்படி குற்றப்பத்திரம் குரங்குகள்மீது தயாரித்து, கோர்ட்டில் தாக்கலும் செய்து விட்டார்களாம் இதற்குள் கைதிகளாகிய குரங்குகள் எப்படியோ நழுவி கம்பி நீட்டிவிடவே மீண்டும் போலீஸ் புலன் விசாரணையில் ஈடுபட்டிருக்கிறார்களாம்! கம்பி எண்ண வேண்டிய குரங்குகள் கம்பி நீட்டியே விட்டன.

இப்போது கூறுங்கள் குரங்குக்கும் மனிதனுக்கும் ஒற்றுமை அதிகமிருக்கிறதா! இல்லையா! என்று மனிதன் தப்பிக்க எண்ணுவதேபோல், குரங்கும் எண்ணுகிறது. மனிதனும் குற்றவாளி குரங்குகளும் குற்றவாளிகளாக மதிக்கப்படவில்லையா!

*

## அபூர்வ சகோதரிகள்!

ஆபூர்வ சகோதரர்களை ஜெமினி திரைச்சித்திரத்தில் கண்டோம்! ஒட்டி இருந்த ஈருடல்கள் வெட்டி பிரிக்கப்பட்டு "எம். கே. ராதா நெம்பர் ஒன்! எம். கே. ராதா நெம்பர் டூ!" ரூபத்தில் கண்டோம். 'நெம்பர் ஒன்' காதல் வெள்ளத்தில் தோய்ந்து இன்ப ஒழுக்கோடு மகிழ்ந்தால்; 'நெம்பர் டூ'வும் காதல் தீயில் தீய்ந்து புழுவெனத் துடித்திடுவார்! இன்ப வெள்ளத்தில் நீந்திச் செல்ல ஏங்கித் தவிப்பார்! காதலின் கனியாம் கற்கண்டின் சுவையாம், இன்பத்தின் ஊற்றும் 'பானுமதி' ரூபத்தில் வழிந்தோடி வந்தால் எதிரே ஓடி இறுகப் பிடித்துக் கட்டியணைத்துக் காதலைச் சுவைக்க சொட்டிடுவார் நாக்கு நீரை. எண்ணியது கிட்டாமற் போனுல் ஏங்கி காய்ச்சிய கனல் இரும்பென மாறிடுவார்! காதலை பங்கு போட்டுக் கொள்வதில் நம்பர் ஒன்னுக்கும் நம்பர் டூவுக்கும் பகை!

நெம்பர் டூ கத்திச் சண்டையில் காயமுற்றால் நம்பர் ஒன்னுக்கு உடனே காயத்தின் வலி தாளாது துடித்திடுவார்!

ஆனுல் 'நெம்பர் டூ—எம். கே. ராதா' போரில் மாண்டுபோனுல் 'நெம்பர் ஒன்— எம். கே. ராதா' காதலி 'பானுமதி'யுடன் சல்லாபமாக இருந்து நாட்டு நடவடிக்கையை கவனிப்பார். இங்கேதான் ஆபூர்வத்தன்மை மங்கிவிடுகிறது. 'நெம்பர் டூ' இறந்தால் 'நெம்பர் ஒன்' எப்படி இறவாமலிருப்பது என்பதுதான் கேள்வி!

எப்படியோ போகட்டும்! திரைப்படக்கதைதானே!

திரைப் படக் கதையிலேவரும் பாத்திரங்களின் நேர் பெயர்கள் நினைவிற்கு சடுதியில் வராமற் போகவே பாத்திரங்களை ஏற்று நடிக்கும் தோழர் தோழியர்களின் உண்மைப் பெயர்களையே குறிப்பிட நேர்ந்தது. ஆதலால் அவர்களை எவ்வகையிலும் இழித்தோ பழித்தோ கூறவேண்டுமென்பது எமது எண்ணமில்லை என்க.

சரி இப்போதென்ன வந்தது அந்த அபூர்வ சகோதரர்களுக்கு என்று கேட்கிறீர்கள்! அல்லவா!

அமெரிக்காவில் வாழும் ஒரு தாயிக்கு உண்மையிலேயே இரட்டைப் பெண் குழந்தைகள் ஒட்டிய வண்ணம் பிறந்தனவாம்! அக்குழந்தைகளின் இரு மண்டைகளும் ஒட்டிய நிலையிலேயே ஆறு மாத காலம் உயிருடனே வளர்ந்து வந்து விட்டனவாம் இரண சிகிச்சைக்கு உடல் பக்குவமெனக் கண்ட மருத்துவர்கள் சென்ற ஏப்ரல் 21-ம் தேதியன்று ஒட்டிய தலைகளை நான்கரை மணி நேரம் தொடர்ந்தாற்போல் இரண சிகிச்சை செய்து வெட்டிப் பிரித்து தனித்தனிக் குழந்தைகளாக ஆக்கி விட்டார்களாம்! சிகிச்சை வெற்றிகரமாக நடந்தேறியதாம்! குழந்தைகள் நலமுடனே இருக்கின்றனவாம் இவ்விரு பிரிக்கப்பட்ட பெண் குழந்தைகள் எஞ்சிய வாழ்க்கையையும் குறையின்றி வாழ்ந்து வருமேயானுல் இதுவே ஒட்டிய மண்டைகளைப் பிரித்த சிகிச்சையின் முதல் வெற்றியாகும் எனக்கருதப்படுகிறதாம்!

இவ்வாறு சிகாகோ செய்தி கூறுகிறது.

பணம், மனம், வாய்ப்பு யாவும் ஒருங்கே நமக்கிருக்குமானுல் திரையில் கண்ட ஆபூர்வத்தை அமெரிக்கா சென்று நேரிலேயே கண்டு திரும்பலாம் அல்லவா!

இப்படி ஒட்டிய வண்ணம் பிறக்கும் இரட்டைப் பிறப்பை ஆங்கிலத்தில் "சயாமீஸ் ட்வின்ஸ்" (SIAMESE TWINS) என்றழைப்பது வழக்கம். உலகில் எப்பகுதியில் இத்தகைய அபூர்வ இரட்டைப் பிறப்புகள் பிறந்தாலும் அவ்வாறேதான் கூறுவதாயிற்று! ஏனெனில் சயாம் தேசத்தில் ஒட்டியவாறே இரட்டையர்கள் பிறந்து 1811-ல் இருந்து 1874 வரை பிரிக்கப் படாது வாழ்ந்து உலகையே வியப்புறச் செய்தார்களாம். அதிலிருந்து அவர்களைப்போல் பிறக்கும் இரட்டைப் பிறப்புகளைச் சயாம் தேசத்து இரட்டையர்கள் என்று குறிப்பிடுதல் வழக்கத்திற்கு வந்தது.

டபிள்யூ. பி. டி. எழிலன்



ஆரம்பக் கல்வி சீர்திருத்தம்

# திராவிட நாட்டுக் கல்வி வரலாறு

12

பண்டைக் காலத்தில் எண்ணையும் எழுத்தையும் கண்ணெனப் போற்றிவந்தனர் எனும் வரலாற்றுண்மையானது

"எண்ணென்ப வேனை யெழுத்தென்ப [விவ்விரண்டும்<br>
கண்ணென்ப வாழு முயிர்க்கு"

எனும் பொய்யாமொழிப் புலவரின் குறட்பாவின் மூலம் தெரியவரும். எண்ணும் எழுத்தும் இரு கலைகளாகப் போற்றப்பட்டு வந்தது என்பதனை இக்குறளினுல் உய்த்துணரலாம்.

எழுத்துக் கலையானது அக்காலத்திலேயே மக்களால் போற்றப்பட்டு நன்னிலையில் இருந்து வந்தது என்பதற்கான ஆதாரங்கள் நமது தமிழ் இலக்கண இலக்கியங்களில் ஏராளமாகவுள்ளன.

'உட்பெறு புள்ளி யுருவாகும்மே' (தொல்–நூன்மரபு—14)

'மெய்யி னியற்கை புள்ளியொடு நிலை [யல்' (மேற்படி—15)

'புள்ளியில்லா வெல்லா மெய்யு<br>
முழுவுரு வாகி யகரமோ டுயிர்த்தலு<br>
மேனை யுயிரோ டுருவுதிரிந் துயிர்த் [தலு,<br>
மாயீரியல வுயிர்த்த லாறே' (மேற்படி—17)

என்றெல்லாம் தொல்காப்பியத்துள் கூறப்பட்டிருப்பது இவ்வுண்மையை தெரிவிக்கும், பிறரறியாமல் ஒரு செய்தியை மற்றொருவர்க்குத் தெரிவிக்கும் போது ஆகாயத்தில் எழுதிக் காட்டும் வழக்கம் அக்காலத்திலிருந்த தென்பது

'அந்தரத் தெழுதிய வெழுத்தின் மான' (தொல்–பொரு–146)

என்னும் சூத்திரத்தால் தெரியவரும்.

பண்டைக் காலத்தில் போர்க்களத்தில் இறந்தவீரர்களுக்குநடுகல் நடுவது வழக்கமா யிருந்த தென்பதும், அந்நடுகல்லில் இறந்த மறவரது புகழையும் சிறப்பையும் வீரத்தினையும் எழுதி சிறப்பிப்பார் என்பதும் சங்க இலக்கியங்களினின்றும் தெரிய வருதலால் அக்காலத்தில் எழுத்துக்கலை உயர்ந்த நிலையில் இருந்தது தெரியவரும்.

'நல்லமர்க் கடந்த நாணுடை மறவர்<br>
பெயரும் பீடு மெழுதி யதர் தொறும்<br>
பீலி சூட்டிய பிறங்கு நிலை நடுகல்'' —அகம் 67

எனும் அகநானூறுப் பாடலினின்றும் நடுகல்லில் இறந்த மறவர்தம் பேரும் பீடும் எழுதுகல் கூறப்படுதல் காண்க. இப்படி நடுகல் நடுவதும் அந்நடுகல்லில் அவர்தம் பேரும் பீடும் எழுதுவதும் தொல்காப்பியர் காலத்திற்கு முற்பட்ட காலத்திலிருந்தே வழங்கப்பட்டு வந்ததெனும் உண்மை,

'காட்சி கால்கோ ணீர்ப்படை நடுகல்<br>
சீர்தகு மரபின் பெரும்படை வாழ்த்த [லென்<br>
றிரு மூன்று வகையிற் கல்லொடு புணர' (தொல்—புறத்தி—5)

எனும் தொல்காப்பிய சூத்திரத்தினுல் தெரிய வருதல் காண்க.

அக்காலத்துப் பெண்கள் தம் தலைவன் தம்மைப் பிரிந்து சென்ற நாட்களை சுவற்றில் குறித்து வைத்து எண்ணி வந்தனர் எனும் வரலாற்றை

"........................<br>
காவிறை நெடுஞ்சுவர் நோக்கி [நோயுழந்து<br>
ஆழல்................" (அகம் 61)

எனும் அகநானூற்றுப்பாடலில் மாமூலனார் தெரிவிப்பதினின்றும் அக்காலப் பெண்கள் எழுத்தறிந்திருந்த வரலாறு தெரியலாம்.

எழுதப்பட்டது ஏடு, இதழ் என்று வழங்கப்பட்டன.

"வடமொழி வாசகஞ் செய்த நல்லேடு" (சிலப்—அடைக்—58)

"இப்பொருளெழுதிய விதழிது" (மேற்படி—66)

என வருவது காண்க. ஏடு என்பது கவியை எழுதிய ஏடு எனப் பொருள் படும். ஏடு எனவும் வழங்கப்படும். இவ்வண்ணம் எழுதப்பட்ட ஏடு எனும் நூலானது தொல்காப்பியர் காலத்தில் 'அந்தணர்க்கே' உரியதாக இருந்தது எனும் செய்தியை

'நூலே கரக முக்கோல் மணையே<br>
யாயுங்காலை யந்தணர்க் குரிய'

என்னும் தொல்காப்பிய சூத்திரம் தெரிவிப்பது காண்க.

அக்காலத்தில் திருமுகம் எழுதுவோர் என சிலர் அரசவைக்களத்திலிருந்து வந்தனர். அரசன் சொல்ல, அதன்படி எழுதி, எழுதிய ஓலையை உரையிட்டு இலச்சினைப் பொறித்து கொடுப்பர் என சிலப்பதிகாரத்தில் கூறப்படுகின்றது. இத்திருமுகம் எழுதுவோர் கண்ணெழுத்தாளர் எனவும் வழங்கப்பட்டு வந்தனர். இதனுல் அக்காலத்தில் ஏடுகளிலும் இதழ்களிலும் எழுதும் வழக்கம் இருந்து வந்ததென்பதும் ஒருவரிடமிருந்து ஒருவருக்கு முடங்கல் எழுதி அனுப்பப்படும் வழக்கம் இருந்து வந்ததென்பதும் தெரிய வரும். கோவலனை பிரிய நேரிட்ட மாதவி கோவலனுக்கு முடங்கல் எழுதிய செய்தி சிலப்பதிகாரத்துள் கூறப்பட்டிருப்பதும் தெரிக மற்றும்,

அக்காலத்திய மக்கள் ஓலைகளில் எழுதியும் அப்படி எழுதப்பட்ட ஓலைகளை கயிற்றினுல் கோர்த்து சுவடியாகக்கட்டி பாதுகாத்து வந்தனர் என்பதும்தெரிய வருகின்றன. தமது கணக்குவழக்குகளை ஒழுங்காக எழுதி அவை கெட்டுப் போகாவண்ணம் பாதுகாத்து வந்தனர் அக்காலத்து மக்கள் என்பது மருதனிள நாகனார் எனும் புலவர் பாடியுள்ள அகநானூறு பாட்டொன்றால்தெரியவருகின்றது.

'........................<br>
கயிறு பிணிக் குழிசி ஓலை கொண்மார்<br>
பொறிகண் டழிக்கும் ஆவண மாக் [களின்<br>
........................' (அகம் 77)

இப்பாட்டடிகளின் பொருளாவது: "கயிற்றாற் பிணித்தலையுற்ற குடத்திலுள்ள ஓலையை எடுத்துக் கோடற்கு அக்குடத்தின் மேலிட்ட இலச்சினையை ஆய்ந்து நீக்கும் அவ்வோலையைத் தேரும் மாக்கள் அவையிற்றை வெளியே ஈர்த்தெடுதல் போல" என்பது பொருளாகும்.

பண்டைக் காலத்தில் மாணக்கர் பயின்று வந்த இடங்கள் பாடசாலைகள் என்று வழங்கப்பட்டது எனத் தெரியவருகின்றது. 'தொல்காப்பியரின் ஒருசாலை மாணக்கராகிய பனம்பாரனார்' என்று கூறப்படுவதில் ஒருசாலை என்பது ஒரே பாடசாலையில் கல்வி பயின்றதைக் குறிப்பிடுதல் காண்க.

சிற்றூர்களில் சிறு கல்விச்சாலைகள் நடந்து வந்தன என்றால் பேரூர்களில் மன்றங்களில் கல்விச்சாலைகள் நடத்தப் பட்டு வந்தன. ஊர்ப் பொதுவேயுள்ள நிழல் பொருந்திய மரத்தின் கீழ் இப்படிப்பட்ட கல்விக் கூடங்கள் நடத்தப் பட்டு வந்தன. ஊர்ப் பொதுவிடங்கள் ஊர்மக்கள்கூட்டங்கூடுவதற்கும்பொது விஷயங்கள் பேசுவதற்கும் பயன்படுத்தப்பட்டு வந்தன.

"தொன்மூ தாலத்துப் பொதியிற்'; (குறுந்தொகை–15)

எனக் கூறப்படுதல் காண்க.

ஆசிரியர்கள் தம் இல்லங்களிலேயே கல்விக்கூடங்கள் அமைத்து மாணவர்கட்கு கல்விப் பயிற்று வித்தனர். இப்படிப்பட்ட கல்விக்கூடங்கள் தெற்றிப் பள்ளிகள்—அதாவது திண்ணைப் பள்ளிக்கூடங்கள்—என வழங்கப்பட்டன. இத்திண்ணைப் பள்ளிக்கூடங்கள் நம் திராவிட நாட்டிற்கே உரித்தான தொரு சிறப்பான கல்விக் கூடங்களாகும். இவ்வகையான பள்ளிகளே ஆங்கிலேயர்கள் இந்நாட்டிற்கு வந்த காலத்தில் இருந்தன என்பது சரித்திர உண்மையாகும். இப்படிப்பட்ட திண்ணைப் பள்ளிக்கூடங்கள் ஓராசிரியர் பள்ளிக்கூடங்களாகவே இருந்து வந்தனவென்பதும், ஆசிரியருக்கு தலைமாணக்கன் (சட்டாம்பிள்ளை) கல்வி கற்பிக்கும் வேலைகளில் உதவி புரிந்து வந்தான் என்பதும் புகழ்பெற்ற வரலாறுகளாகும். சட்டாம் பிள்ளை (ஆங்கிலத்தில் 'மானிட்டர்') என்பான் பள்ளி ஆசிரியருக்கு தனது மாணவ வாழ்க்கையில் பிற மாணவர்கட்கு கல்வி புகட்டும் வேலையையும் செய்து வந்தது நம் நாட்டிற்கே உரித்தான தொன்றுதொட்டு வரும் வழக்கம். இவ்வழக்கத்தைக் கண்ட ஆங்கிலேயர்கள் தமது தாய் நாடான இங்கிலாந்திலும் இம்முறையைப் புகுத்தி அனுசரித்து வெற்றி கண்டனர். இதை 'மானிடோரியல் முறை' என்றும் பெருமையாகக் கூறிக் கொண்டனரென்றால் நம் பண்டைக் கால திண்ணைப் பள்ளிக்கூட முறையின் மேன்மையை கூறவும் வேண்டுமோ! இப்படிப்பட்ட திண்ணைப் பள்ளிகளிலும் ஊர்ப் பொதுமன்றங்களிலும் கல்விப் பயிற்சி நடந்து வந்தபோது பெரும் பட்டி மண்டபங்களிலும் மன்றங்களிலும் உயர்தரக் கல்வி பயிற்சி நடைபெற்று வந்தது. பட்டி மண்டபம் என்பது கலை ஆராய்வதற்குரிய மண்டபமும் ஆகும்.

'பன்னருங் கலைதெரிபட்ட மண்டபம்'

எனக் கம்பராமாயணமும்,

'ஒட்டிய சமயத் துறுபொருள் வாதிகள்<br>
பட்டி மண்டபத்துப் பாங்கறிந் தேறு [மின்'

என சிலப்பதிகாரமும் கூறுதல் காண்க; இப்படிப்பட்ட பட்டி மண்டபங்களில் இளம் மாணக்கர்கள் தம் சொல் வன்மையையும் பேச்சு வன்மையையும் காட்டி வந்தனர் என்பது முன் கூறப்பட்டுள்ளது.

உயர்கல்வி பயிலும் மாணக்கர் ஆசிரியருடன் இருந்தும் சென்றும் வந்தும் இட்ட வேலைகளைச் செய்தும் கல்வி கற்று வருவாராயினர். இவ்வுயர் கல்வி பயிற்சிக்கு குறிப்பிட்ட இடமும் காலமும் தேவை யில்லாமல் எவ்விடத்தும் எப்பொழுதும் பயில்விக்கப்பட்டு வந்தது. இம்முறையில் பயிற்சிப் பெற்றவர்களே பெரும் புலவர்களும் ஆசிரியர்களும் ஆவர். கல்விக் கூடங்கள் கட்டப் படுதற்கோ பழுது பார்க்கப் படுதற்கோ ஊர்மக்கள் உதவி புரிந்து வந்தனர். ஆசிரியரின் வாழ்க்கைக்கான தேவைப்பட்ட எல்லா பொருள்களும் கொடுக்கப்பட்டன. ஆசிரியர்கட்கு ஊர் மக்கள் பெரும் மதிப்பும் மரியாதையும் கொடுத்து வந்தனர்.

ஆனுல் தமிழ் ஆசிரியர்களுடைய தமிழ்ப் புலவர்களுடைய வாழ்க்கை ஏழ்மை வாழ்க்கையாகவும், வறுமை வாழ்க்கையாகவும் இருந்து வந்ததாகவேத் தெரிய வருகின்றது. சங்க காலப் புலவர்கள் தாங்கள் வறுமையால்வாடிய உண்மைகளை பாட்டு வடிவங்களில் பாடிச் சென்றுள்ளதே இக்கூற்றிற்கு போதிய ஆதாரமாகும்.

கல்விச் சிறப்பென்பது தமிழ்ச் சிறப்பே யன்றோ! அக்கால மக்கள் தமிழ் வளர்க்கும் வழியே கல்வியையும் வளரச் செய்து வந்தனர். புலமை யெய்திய ஆசிரியர்கள் ஒன்றுகூடி தமிழ் ஆய்ந்து வந்ததும் தமிழ் வளர்த்து வந்ததும் அக்கால வரலாற்று உண்மைகளாகும். இக்காலத்திலோ தமிழ் ஆய்வதோ தமிழ் வளர்ப்பதோ கேலிக்குரியனவாயுள்ளன. தமிழ் வளர்ச்சியே மக்களின் கல்வி வளர்ச்சி என்ற நாட்டின் தொன்று தொட்டமுறை கைவிடப்பட்டு தமிழில் பேசுவதும் எழுதுவதும் பரிகசிப்பதற்குரியனவாய் விட்டன. தமிழ்கூறு நல்லுலகத்தை இந்தி ஆள்வதா அல்லது சமஸ்கிருதம் ஆள்வதா என்ற பிரச்சினை ஏற்பட்டு கேலிக்கூத்திற்குரிய விஷயமாக உள்ளது.

கல்வி வளர்ச்சியில் கண்ணும் கருத்துமா யிருந்த அக்கால நல்லிசைப் புலவர்கள் தமிழ் அவைக் கண்டு தமிழ் வளர்த்து நாடெங்கும் தமிழ் தழைக்கச் செய்திருந்தனர், புலவர்கள் மட்டுமல்ல நாடாண்ட அரசர்களும் தமிழ் ஆய்ந்தனர் தமிழ் வளர்த்தனர். சங்க இலக்கியங்கள் இவ்வுண்மைகளை விளக்கிக் கூறுகின்றன.

'வித்தையாண்ட விளம்பழையன் [மாறன்"<br>
(பதிற்றுப்–90–பதிகம்)

என்பதனுல் கல்வி முழுதும் ஆண்ட பாண்டியன் எனத் தெரிதல் காண்க. நல்லாசிரியர்கள் பலர் தம்முள் மனம் ஒத்தி இயைந்து கூடிய கூட்டத்தில் (சங்கத்தில் அல்லது அவையில்) அவர்களோடு கல்வி இன்பம் துய்த்து புகழுடைந்தனர் என்ற செய்தியை

'தொல்லாணை நல்லாசிரியர்<br>
புணர்கூட்டுண்ட புகழ்சால் சிறப்பின்<br>
நிலந்தரு திருவி னெடியோன்' [மதுரைக்—761—763]

என 'மதுரைக் காஞ்சி'யில் வருவதால் தெரியலாம்.

இப்படிப் புலவர் அவைகூடி தமிழ் ஆய்ந்து கல்வி வளர்த்த பெருமைக்கு உரியதாகக் கூறப்படுவது மதுரையம்பதியாகும். முச்சங்கங்கள் தோன்றி வளர்ந்த மாநகர் மதுரை மாநகர் என்பது நாம் நன்கறிந்ததே. தமிழ் நாட்டின் தனிப்பெரும் கல்விக் கூடமாய் மதுரை விளங்கியது அக்காலத்தில். இக்காலத்திலோ! தென்றமிழ் மதுரைச் செழுங்கலைப் பாவையாள் ஆரிய விடம் ஊட்டப்பட்டு உருமாறி வருகின்றாள்! என்னே ஊழ்ப்பயன் சூழ்ந்து கொண்டுள்ளது தண்டமிழ்ப் பாவையை! தமிழ் மணம்கமழ திகழ்ந்த மதுரையை

'தமிழ்நிலை பெற்ற தாங்கரு மரபின்<br>
மகிழ்நனை மறுகின் மதுரை'' (சிறுபாணாற்றுப்படை 66–67)

என சிறுபாணாற்றுப் படையில் புகழ்ந்திருப்பது பார்க்க.

'மதிமொழி யிடல்மாலை வினைவர்போல் [வல்லவர்<br>
செதுமொழி சீத்த செவிசெறு வாக<br>
முதுமொழி நீராப் புலனு வுழவர்<br>
புதுமொழி கூட்டுண்ணும் புரிசைசூழ் [புனலூரே"<br>
(கலித்தொகை–68)

என கலித்தொகையுள் புகழப்பட்டிருப்பது பாராட்டக் கூடியதாகும்.

புலவர் செந்நாப் பொருந்திய நிவப்பிற் பொதியிற் றென்றல் போலா தீங்கு

13-ம் பக்கம்

# பேராசிரியர் பேசுகிறார்!

வி. சுந்திரராசு, சங்கரன் பயிற்சிப் பள்ளி, திருச்சி

## 7

சமுதாயத்திற்குக் கட்டுப்பாடு வேண்டாமென்டவனல்ல நான். சமுதாய இயங்கு முறைக்கு கட்டுப்பாடு அவசியமானது மட்டுமல்ல, அடிப்படையானதுங் கூட. குறிப்பாக அரசாங்கம் உணர்த்தும் சமுதாயக் கட்டுப்பாட்டை ஆதரிக்காதவர்கள் யாருமிருக்கமாட்டார்கள். கட்டுக்கோப்பாக வாழ்ந்த காரணத்தால்தான் வெள்ளைக்காரர்களும் ஐரோப்பியர்களும் அகில உலகத் தொடர்பு கொள்ள முடிந்தது. வெள்ளைக்காரர்களுக்கும் ஐரோப்பியர்களுக்கும் உள்ள இரத்தபாசம் வேறு எந்த இனத்தாருக்குமே இல்லை என்று கூட கூறி விடலாம். அவர்களெல்லாம் கடமையோடு ஒன்றித்துப் போனவர்கள். கட்டுப்பாடான வாழ்க்கையைப் பெரிதும் உணர்ந்தவர்கள். பொதுநலவாழவுக்கும் சுயமனிதன் வாழ்வுக்கும் எண்ணிறந்த வேறுபாடுகளை உணர்ந்தவர்கள். பொதுவாழ்வுக்காக சுய உரிமையை விட்டுக் கொடுக்காதவர்கள்—சுயஉரிமை கோரி பொதுநலனுக்குக் குந்தகம் விளைவிக்காதவர்கள் அவர்கள் வாழக்கையில் நெறியாக வாழப் பயின்றவர்கள். அவர்களுடைய அலுவலகங்களில் ஒழுங்கு முறையைப் பெரிதும் காணலாம்.

எத்தனையோ கற்றொலை தூரம் கடல் கடந்து வந்து வாணிபம் செய்து நாட்டைப் பேணிக்காத்தப் பெருமை அவர்களுக்குத்தான் உண்டு. சாதாரணமாக லண்டன் நகரங்களில் கட்டுக் கோப்பு சிதைவு படுவது மிக சொற்பமே! இந்தியத் துணைக்கண்டத்திலோ தமிழகத்திலோ உள்ள அளவுக்கு இவ்வளவு தூரம் அங்கெல்லாம் சட்ட மறுப்பு இயக்கங்கள் இல்லை. வேறு நாடுகளோடு ஒப்பிட்டுப் பார்க்கும் போது தொழிலாளர் வேலை நிறுத்தம் கூட மிகக் குறைவுதான் அந்நாட்டில் மட்டும். தொழிலாளர் பிரச்னைகள் வெகு சுலபத்தில் தீர்ந்து விடுகிறது. இந்நாட்டில் இருப்பதைப் போல இவ்வளவு வாதப் பிரதிவாதங்கள் அங்கே மிளிர்வதில்லை. இங்கே உள்ளதைப்போல அரசாங்கக் கட்டுப்பாடுகள் அங்கெல்லாம் சிதைவு படுவதில்லை. இங்கே உள்ள அரசாங்க எதிர்ப்புக் குரல்கள் அங்கு மிகக்குறைவு என்றுதான் சொல்ல வேண்டும்.

ஏன் அன்னைத் தமிழகத்தில் மட்டும் சட்ட மறுப்பு இயக்கங்களும் எதிர்ப்புப் பிரசாரங்களும் எண்ணிக்கைக்கு அப்பாற்பட்டு மலிந்துவிட்டது. எடுத்ததற்கெல்லாம் அரசாங்க எதிர்ப்பைக் காணுகிறோம். ஒரு அமைச்சர் ஓராண்டு காலம் நிலைத்து ஆள்வது கூட சந்தேகம்தான். ஒரு அமைச்சர் சபை தோன்றும்போதே அதன் அழிவு சபையுடகூடி தனிப்பட்ட முறையில் பேசத் தலைப்படுகிறது. குழப்ப மேற்படாத அமைச்சர் சபையைத் தமிழகம் காணுவது மிகவும் அரிதாகி விடுகிறது. ஏன் தமிழகத்தில் மட்டும் இந்த நிலை? தமிழ் நாட்டில் மட்டும் ஏன் சட்ட மறுப்பு இயக்கங்கள் பெருவாரியாக எழவேண்டும்? அரசாங்கத்திற்கும் மக்களுக்கும் ஏன் இவ்வளவு பேதம்?

கல்லூரியில் அன்று நடைபெற்ற மாணவர்கள் போராட்டத்தின் மூலம்தான் இத்தனை கேள்விகளுக்கும் சரியான விடையை உணர்ந்து கொள்ள முடிந்தது. கல்லூரி முதல்வர் அன்று மாணவர் சங்கம் நிறைவேற்றியபடி பேராசிரியர், நாராயணசாமியை மன்ற அரங்கில் பேச அனுமதித்திருந்தால் எந்த போராட்டமும் ஏற்பட்டிருக்காது. எந்தவிதமான குழப்பத்திற்கும் இடம் இல்லாமற் போயிருக்கும். கல்லூரி முதல்வருக்கும் பேச்சாளர் நாராயணசாமிக்கும் உள்ள பேதா பேதத்தை அடிப்படையாகக் கொண்டு மாணவர்கள் உரிமையைப் பறிக்க முயன்றார். முடிவில் கல்லூரியே குழப்பத்தில் ஒருநாள் மூழ்க வேண்டிய நிலைமை ஏற்பட்டது. அரசாங்கமானாலும் சரி, கல்லூரியானாலும் சரி, கட்டுப்பாட்டிற்கும் உரிமைக்கும் உள்ள வரம்புகளை ஓரளவுக்கு உணர்ந்து கொள்ள வேண்டும்.

கட்டுப்பாடு மிக அவசியமானதுதான். ஆனால் எது பிறர் உரிமையைப் பறிக்குமேயாயின் அமைச்சரானாலும் சரி, கல்லூரி முதல்வரானாலும் சரி, அதனைத் திரும்ப நீக்கியேயாக வேண்டும். அதேமாதிரியான்தான் உரிமையும் கூட. மக்கள் உரிமையும் ஒரு வரம்புக்கு உட்பட்டதுதான். இதனை வெள்ளைக்காரர்கள்தான் பெரிதும் உணர்ந்திருக்கிறார்கள். எனவேதான் அங்கே இவ்வளவாகக் கட்டுப்பாடு சிதைவதுமில்லை;—அதனை எதிர்ப்பதுமில்லை.

அரசாங்கமானது கள்ளச்சாராயம் காய்ச்சும் தந்தையார் மகனுக்கு 'கள்ளுண்ணாமை' எனும் வள்ளுவநெறியைப் போதிக்கும் மனிதனைப் போன்றோரை அமைச்சராகக் கொண்டு இயங்குமாயின் எங்ஙனம் கட்டுப்பாட்டைக் காக்க இயலும்! 16-ம் நூற்றாண்டில் மதம் அழிந்து பட்டது கூட இதே காரணத்தால்தான். மதத் தலைவனுக்கு ஆண்டவன் இல்லை—மதத் தலைவன் எதுவேண்டுமானாலும் செய்யலாம்—மதக் குருவா ஆண்டவனுக்கு அடுத்தவன்— என்றெல்லாம் எண்ணக் கூடிய காலம் ஏற்பட்டதால்தான் சமய எதிர்ப்பு இயக்கங்கள் கூட மலர ஆரம்பித்தது, மதக் குரு மக்களுக்கு போதிக்கும் நெறி தனக்குமுள்ளதோர் பொதுநெறி என்றுணர்ந்து அதன்வழி இயங்காத காரணத்தால்தான் நாடெங்கும் எதிர்ப்பு மதஇயக்கங்கள்கூட பரவ ஆரம்பித்தது.

என்னுடைய பழைய ஞாபகம் திரும்பத் திரும்ப நினைவுக்கு வருகிறது. வகுப்புக்கு நேரதாமதமாகச் சென்ற காரணத்தால் மாணவர்கள் பெரிதும் கூக்குரலிட்டார்கள் — பேராசிரியத் தலைவர் வகுப்பினுள் வந்து அடக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டுவிட்டது. இதனை இப்போதுதான் நினைத்துக்கொள்ள வேண்டிய அவசியம் ஏற்படுகிறது.

ஒருநாள் தானே மெய்மறந்து ஆசிரிய மன்றத்திலேயே இருந்துவிட்டோம்—அந்த ஒரு நாளைய நேர தாமதத்திற்கு இவ்வளவு பெரும் கூக்குரலையா மாணவர்கள் எழுப்புவது என்று எண்ணிக் கண் கலங்கிப் பெருமூச்சிட்டேன். ஆனால் இப்போது தான் அதன் முழு உண்மையையும் உணருகிறேன். ஒரு நாளாயிருந்தாலும், ஒரு நாள் தானே—அந்த ஒருநாள்தானே வகுப்பிலே மாணவர்கள் கூக்குரலிட்டார்கள். என் கடமையை மறந்தேன்—அவர்களும் தங்கள் கடனை மறந்து படுகிறார்கள். ஆசிரியர் வகுப்பிலே இயங்கும்போது உள்ள அமைதி, அவர் வகுப்பில் இல்லாதபோது இல்லை. இதுவே போதுமான அரசியற்துறைக்கான சான்று என்றும் கருதுகிறேன். அரசும் அமைச்சும் காலத்தில் நெறியோடு இயங்கும்போது மக்கள் எதிர்ப்பதில்லை. அரசு காலம் தவறினாலும் அமைச்சு நெறி தவறினாலும், எதிர்ப்பு இயக்கங்களும் பொதுமேடைகளும் வளர ஆரம்பிக்கின்றன. புகை பிடிக்கும் பெற்றோர்கள் தன் பண்பைக் கொஞ்சம் மாற்றிக் கொண்டு குழந்தைகளுக்குப் புகை பிடிக்கக் கூடாது என்று கண்டிக்கும் காலம் வரவேண்டும்.

> **49,36,098-10-0**
>
> ●
>
> போட்டிப் பந்தயப் பரிசுத் தொகையன்று. செங்கல்பட்டு, சென்னை, தென் ஆற்காடு, வட ஆற்காடு, தஞ்சாவூர் முதலிய மாவட்டங்களில் உள்ளபெரிய கோயில்களின் நகை முதலியவற்றின் மதிப்பு அவ்வளவுதான்!

மக்கள் ஒழுங்கைவிட அரசாங்க ஒழுங்குதான் இன்றியமையாதது என்பேன். எட்மண்டர்பர்க் (Edmund Burke) கூறுவதைப் போல் மக்கள் நெறிதவறினால் பிழை என்றுதான் கருதப்படும். குற்றமாகக் கடியப்படாது. ஆனால் அரசாங்கப் பிழையோ பேராபத்தை விளைவிக்கக் கூடிய தொன்று.

இந்த உண்மையை மேனாட்டு அரசாங்கங்கள் பெரிதும் உணர்ந்துள்ளன, எனவேதான் அந்நாட்டுக் கட்டுப்பாடுகளுக்கு மக்கள் இணங்க இயல்கிறது. ஆனால் இந்நாட்டுக் கட்டுப்பாடோ மக்களையே சட்டத்தின் அடிமையாக்கக் கூடியது; சுய உரிமைக்கு மதிப்பும் பெருமையும் கொடுக்காதது; புதுமையைச் சொன்னால் எள்ளி நகையாடக் கூடியது; மடமையானாலும் அரசு சொல்வதையே அரங்கேற்றினால் ஆயிரம் 'பேஷ்' போடக் கூடியது. சட்டம் தனிமனிதன் உரிமையில் பெரிதும் தலையிடுகிறது; எனவேதான் நாடெங்கும் கண்டனக் கூட்டங்களும், எதிர்ப்புப் பிரசாரங்களும் வளர ஏதுவாகிறது. ஒருசில சான்றுகள் மட்டும் தருகிறோம். நாட்குறிப்பில் கண்ட உண்மைகளைக் கூறி இதனை விளக்க முயல்கிறேன்.

17—3—50: இளசையைச் சேர்ந்த, சுயமரியாதை மனப்போக்கு படைத்த ஒருவர் தமிழர் முறைக்கிணங்க சீர்திருத்தத் திருமணம் செய்து கொண்டார். வழக்கு மன்றத்திற்கு வேறுசில வழக்கு சம்பந்தமாகச் சென்றபோது அவர் திருமணம் செல்லாது என்று தீர்ப்பு வழங்கி விட்டனர். அவரும் பொது சகாக்களும் தான் மணந்து கொண்ட ஐக்கிய உறவைச் செல்லாது என்று சொன்ன சட்டத்தை எதிர்த்துப் போராடுகின்றனர். அனுதினமும் சட்டசபைக்கு முன்னால் மறியல் செய்து வந்தனர். இறுதியில் கைது செய்யப்பட்டு கூண்டுக்குள் குற்றவாளியாக நிறுத்தப்பட்டனர்.

18—9—50—என் பழைய நண்பர் முத்தையாவின் வழக்கு. அவர் வீட்டிற்கு அருகே உள்ள குடிகாரன் அடிக்கடி கள்ளச் சாராயம் காய்ச்சுகிறார், பக்கத்து வீட்டு முத்தையா குடித்தனமே நடத்த இயலவில்லை. எவ்வளவோ முறையாக போலீசில் வழக்கிட்டும் முடிவு காணவில்லை. சட்டம் சரிவர வேலை செய்யவில்லை என்று வழக்கு தொடுத்தார்.

*

20—10—50—பேச்சுரிமை, எழுத்துரிமை விலக்கும் அரசாங்க சட்டத்தை நோக்கி நண்பர் ஆறுமுகம் தொடுக்கும் வழக்கு: திருநெல்வேலி வட்டாரத்தில் புதுமைக் கழக எண்ணங்களை வெளியிடக் கூட்டப்படும் கூட்டம் ஒரு கூட்டத்தையாவது அரசாங்கம் அனுமதிப்பதில்லை. கூட்டம் நடந்தால் கலவரம் விளையும் என்ற ஆதாரத்தை அரசினர் சுட்டிக்காட்டி கூட்டம் கூட்ட அனுமதிப்பதில்லை. கூட்டம் கூட்ட அனுமதித்து கலவரம் நிகழாது காப்பதே அரசினர் கடன் என்று வலியுறுத்தி வழக்கு தொடுத்துள்ளார்.

*

12—12—50—மதத் தலைவர்களின் ஆடம்பரப் போக்கைக் கண்டித்தும் மடாதிபதிகளின் சொத்துக்களை அரசினர் சொத்தாக்க வேண்டும் என்றும் வலியுறுத்தி வந்த மசோதா ஏன் சட்டமாக்கப்படவில்லை என்று கேட்டு நண்பர் சக்ரபாணி 12 நாட்களாக உண்ணாவிரதமிருக்கிறார். மதத்தலைவர்களின் போக்கு மாறும்வரை அரசாங்க மன்றத்தில் உண்ணாவிரதம் நீடிக்குமாம்.

*

இதுவும் இதுபோன்ற பல் சட்ட எதிர்ப்புக்களும் இந்நாட்டில் மலிந்துள்ளதைக் காணுகிறேன். நாட்டில் ஒரு மூலையில் கட்டுப்பாடு சிதைந்துபட்டால் அந்நாட்டையே பெரிதும் பாதிக்கக்கூடியதாக உள்ளது. கட்டுப்பாடு சிதையும்போதெல்லாம் கண்ணியக் குறைவும் ஏற்படுகிறது. கட்டுப்பாடு சிதைவுறாமல் இருக்க மக்கள் மனம் மாற்றம்தான் தேவைப்படுவதாகக் கூறும் கோணல்புத்திபடைத்த பேனா வீரர்களும் ஏராளமாக மலிந்துள்ளனர். மக்கள் மனப்போக்கு ஆளும் அரசினர் போக்கையே பெரிதும் ஒத்தது என்று உணரும் காலம் ஒன்றும் வரவேண்டும்.

மக்களுக்காக அரசாங்கமா, அரசுக்காக மக்களா என்று அரசு உணரும் காலம் விரைந்து வந்து விட்டால் அரசாங்கக் கட்டுப்பாட்டிற்கு எந்த பேராபத்தும் நேர்ந்துவிடாது என்பதுகூட உண்மைதான். மக்கள் விரும்பும் அரசு அமைக்கப்பட வேண்டும். அப்போதுதான் அரசின் மீது மக்களுக்கும் பேரார்வம் வளர இயலும். அரசுக்காக மக்கள் பணியும் காலமும் அப்போதுதான் மலர இயலும்.

[தொடரும்]

### கொள்கை வீரர் மறைந்தார்

●

நெடுநாளாய் நீதிக் கட்சியில் பணியாற்றியவரும், தனது கொள்கைக்காக இறுதி மூச்சுவரை வாழ்ந்தவருமான உயர்திரு. எம். பி ரங்கசாமி ரெட்டியார் அகால மரணமடைந்தார் என்ற செய்தி என்னை அதிர்ச்சியில் ஆழ்த்தியது.

கொள்கை விளக்கு அணைந்துவிட்டது......! ஒழுக்க சீலர் மறைந்துவிட்டார். வட ஆற்காடு மாவட்டமே ஓர் உழைப்பாளியை இழந்துவிட்டது. தோல்வி துறத்தினாலும் வெற்றிக் களை மாறா வீரர் மறைந்துவிட்டார். நினைக்க நினைக்க நெஞ்சம் குமுறுகிறது; அவர் தொண்டு இதற்குள் அறுந்திடுமென்று எவருமே எதிர்பார்த்திருக்க முடியாது.

அவரை இழந்து தவிக்கும் அவரின் மனைவி மக்களும் அவர் சோதரர் திரு. எல்லப்ப ரெட்டியாருக்கும், குறிப்பாக தி. க. தோழர். சீதாபதி அவர்கட்கும் எனது ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அன்புள்ள,
ப. உ. சண்முகம், திருவண்ணாமலை.



# நாடு என்றால் என்ன?

எம். எஸ். ராமசாமி.

## 13

### பரம்பரைக் கலைகள்

பரம்பரைக் கலைகள் என்றால் தொன்றுதொட்டு ஒரு சமுதாயத்தாரால் கையாளப்பட்டு வரும் கலைகள் என்று பொருள்படும். பொதுவாகக் கலைகள் என்றால் இலக்கியங்கள், நிலநூல், வான நூல் மருத்து நூல், இசை நூல், சிற்பம், சித்திரம், நடனம். நாடகம் என்பன போன்றவைகளையே இதர ஏடுகள் கலைகள் என்று குறிப்பிடும். ஆனால் அரசியல் விவகாரத்தில் வரும்போது கலைகள் என்பவை மேலே கண்டவைகள் மட்டும் அல்ல.

ஆண்கள் பெண்கள் அணியும் நகை, வேட்டி, சேலைகளில் செய்யப்படும் வேலைப்பாடுகள். கட்டிடங்களின் அமைப்புகள்—அவற்றை அலங்கரிக்கும் விதங்கள், ஆண்கள் பெண்களின் அலங்கார முறைகள் ஆகிய இவைகளும், இவை போன்றவைகளும் கலையின் பகுதியில் சேர்த்துக் கொள்ளப்படும். ஏனெனில்; மக்கள் செய்து கொள்கிற அலங்கார முறைகள் ஆடை அணிகள் மிக மிக வேற்றுமைக் கிடமாக உள்ளன. இவைகளை விரித்து எழுதப் புகுந்தால் மிக விரியும் என்று அஞ்சி உய்த்துணரத் தக்கவாறு சுருக்கிக் கூறுவோம்.

உலகிலுள்ள எல்லாவகை இலக்கியங்களும் ஒவ்வொரு சமுதாயத்தாருக்குரிய கலைகளின் சரித்திரங்களேயாகும். அதாவது இலக்கியத்தை அடிப்படையாகக்கொண்டே எல்லாக் கலைகளும் தோன்றி—இயங்கி வருகின்றன.

திராவிடத்தில்—தமிழகத்தில், பொதுவாக பல்வேறு வகை இலக்கியங்கள் இருக்கின்றன. அவற்றில் பிற நாட்டார்—பிற சமுதாயத்தாரின் இலக்கியங்களைப் பார்த்து மொழிபெயர்க்கப் பட்டவைகளும் இருக்கின்றன. அவைகளை நீக்கி, திராவிடத்திலேயே தோன்றி திராவிடருக்கே உரித்தான இலக்கியங்களை மட்டுமே எடுத்துக் கொள்கிறோம். திராவிடர்கள்—தமிழர்கள் இலக்கியங்கள் அனைத்தையும் மூன்று பிரிவாக வகுத்துள்ளனர். அவை யாவன:

1. தனி மனிதனுடைய எண்ணத்திலும், பேச்சிலும், செயலிலும் தூய்மை ஏற்படுமாறு போதிப்பவை அனைத்தும் அறநூல் பிரிவைச் சேர்ந்தவை.

2. சமூக—சமுதாயக் கூட்டு வாழ்க்கையில் அறிவும் தூய்மையும், ஏற்படுமாறு அரசியல், அறிவியல், கலையியல், உழவியல், தொழிலியல், வணிகவியல் போன்றவைகளை போதிப்பவை அனைத்தும் பொருள் நூல் பிரிவைச் சேர்ந்தவை.

3. ஆணும் பெண்ணும் கூடி இல்லற இன்ப வாழ்வு நடத்துவதற்கான காம ஒழுக்கத்தைப் போதிப்பவை அனைத்தும் இன்ப நூல்—காமநூல் பிரிவைச் சேர்ந்தவை.

மேலே கண்ட மூன்று பிரிவுகளையும் சேர்த்துச் சுருக்கமாக அறம், பொருள், இன்பம் என்றும், வாழ்க்கைப் பயன் என்றும், தமிழர்கள் கூறுவார்கள். இந்த வாழ்க்கைப் பயன் மூன்றையும் முறையாக உணர்த்துபவை திருக்குறளும் நாலடியாருமாம்.

### வடவர்கள், பலஇனம், பலமொழிகளையுடையவர்களாயிருப்பினும், அவர்களுடைய இலக்கியங்கள்—கலைகள் அனைத்தும் ஆரிய மொழியைச் சேர்ந்தவைதான். எனவே, ஆரிய இலக்கியங்கள்—கலைகளின் தன்மையைத் தெரிந்து கொண்டால், வடவர்களின் இலக்கியங்கள், கலைகளைத் தெரிந்து கொண்டவர்களாவோம்.

ஆரிய இலக்கியங்களின் அடிப்படையே தமிழுக்கு முரண்பட்டதாகும். தமிழைப் போல ஆரிய இலக்கியங்களில் தனிமனித ஒழுக்கம்—சமுதாய ஒழுக்கம் வரையறுக்கப்படவில்லை. அறம், பொருள் இரண்டும் குழம்பிக் கிடப்பதே ஆரிய இலக்கியமாம்.

அறம், பொருள், இன்பம் என்கிற மூன்று பிரிவுக்குள் வாழ்க்கைப் பயனை வரையறுத்தனர் தமிழர்கள். ஆரியரோ, அந்த மூன்று பிரிவுடன் சேர்ந்த நான்காம் பிரிவாக வீடு—மோக்ஷம் என்று ஒன்றிருப்பதாகக் கற்பித்தனர். அவ்வாறு கற்பித்து தர்ம—அர்த்த—காம—மோக்ஷம் என்று வடமொழியால் குறிப்பிட்டுப் 'புருஷார்த்தங்கள்' என்று பெயர் சூட்டினர். வாழ்க்கைப் பயன் புருஷர்களுக்கு மட்டும்தானா உரியது? பெண்களுக்கு இல்லையா? என்றால், பெண்களை அஃறிணைப் பொருளாகப் பாவித்து நடத்துவதே ஆரிய மரபு.

மோக்ஷம் என்கிற வடசொல், முடிவு—விடுதலை என்கிற பொருள் கொண்டதாகும். இதற்கு நேர் தமிழ்ச் சொல்லாக 'வீடு' என்னும் சொல்லைத் தமிழர்கள் எடுத்தாள்கின்றனர். வீடு—விடுதலை அல்லது வீழ்ச்சி என்று பொருள்படும். மோக்ஷம்—வீடு என்பது, மனிதனுடைய சாவுக்குப்பின் கிடைப்பதாகக் கூறப்படுகிறது.

மனிதனுடைய இறப்புக்குப் பின்னால் அடையும் பயன் குறித்து, இப்போது செய்யப்படும் காரியங்கள் அனைத்தும் கற்பனையாகத்தான் இருக்கமுடியும் என்பது தமிழர்கள் கொள்கை. எனவே அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்று ஒழுக்கங்களில் பிழைபடாமல் வாழ்ந்தால் 'வீடு' இறைவன் திருவுளப்படி கிடைக்கும் என்று தமிழர்கள் கருதினர்.

இதற்கு நேர்மாறாக ஆரியர்கள் கருதினார்கள். இயற்கைக்கு விரோதமான சில செயல்களையும், சடங்குகளையும் செய்தால் வீடு கிடைக்கும் என்று கற்பனை செய்தனர். அந்தக் கற்பனையின் பயனாகவே வேத வேள்வி முதலான கொலை பாதகங்களும், ஆபாசச் சடங்குகளும் உண்டாக்கப்பட்டன, இயற்கைக்கு விரோதமாக மனைவி, மக்கள், உற்றார், பெற்றாரைத் துறந்து காடுகளிலும் மலைகளிலும் சென்று மழை, வெயில், குளிரைப் பொறுத்துக் கொண்டு, உணவு உடையில்லாமல். காய்கனி முதலியவற்றை உண்டு நீரில் மூழ்கியும், நெருப்பில் கிடந்தும் சடையை வளர்த்தும், தலையை மழித்தும், தவம் என்கிற பேரால் உடலையும் உயிரையும் வருத்திச் சாவோருக்கு, மோக்ஷம் கிடைக்கும் என்ற மூடநம்பிக்கை முளைத்தது. இவைகளை தமிழர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை.

உதாரணமாகப் பட்டினத்தார் இயற்றிய திருவிடைமருதூர் மும்மணிக் கோவை 11-ம் திருமுறையில் கூறியிருப்பதைக் காண்க:—

> "மலர்தலை உலகத்துப் பலப்பல மாக்கள்
> மக்களை மனைவியை ஒக்கலை ஓரீஇ
> மனையும் பிறவும் துறந்து நினைவரும்
> காடும் மலையும் புக்குக் கோடையில்
> கைமேல் நிமிர்த்துக் கால்ஒன்று முடக்கி
> ஐவகை நெருப்பின் அழுவத்து நின்றும்
> மாரி நாளிலும் வார்பனி நாளிலும்
> நீரிடை மூழ்கி நெடிது கிடந்தும்
> சடையைப் புனைந்தும் தலையைப் பறித்தும்
> உடையைத் துறந்தும் உண்ணாது உழன்றும்
> காயும் கிழங்கும் காற்றுதிர் சருகும்
> வாயுவும் நீரும் வந்தன அருந்தியும்
> களரிலும் கல்லிலும் கண்படை கொண்டும்
> தளர்வுறும் இயாக்கையைத் தளர்வித்து ஆங்கவர்
> அம்மை முத்தி அடைவதற் காகத்
> தம்மைத் தாமே சாலவும் ஒறுப்பர்
> ஈங்கிவை செய்யாது இயாங்கள் எல்லாம்
> பழுதின்று உயர்ந்த எழுநிலை மாடத்தும்
> செந்தாது உதிர்ந்த நந்தன வனத்தும்
> தென்றல் இயங்கும் முன்றில் அகத்தும்
> தண்டாச் சித்திர மண்டப மருங்கிலும்
> பூவிரி தரங்க வாவிக் கரையிலும்
> மயிற்பெடை ஆலக் குயிற்றிய குன்றிலும்
> வேண்டுழி வேண்டுழி யாண்டாண் டிட்ட
> மருப்பின் இயன்ற வாள்அரி சுமந்த
> விருப்புறு கட்டில் மீமிசைப் படுத்த
> ஐவகை அமளி அணைமேல் பொங்கத்
> தண்மலர் கமழும் வெண்மடி விரித்துப்
> பட்டினுள் பெய்த பதனுண் பஞ்சின்
> நெட்டணை அருகாக் கொட்டைகள் பரப்பிப்
> பாயல் மீது பரிபுரம் மிழற்றச்
> சாயல்அன் னத்தின் தளிர்நடை பயிற்றி
> ...அஞ்சொல் மடந்தையர் ஆகம் தோய்ந்தும்
> சின்னம் பரப்பிய பொன்னின் கலத்தின்
> அறுசுவை அடிசில் வறிதினிது அருந்தாது
> ஆடினர்க் கென்றும் பாடினர்க் கென்றும்
> வாடினர்க் கென்றும் வரையாது கொடுத்தும்
> பூசுவன பூசியும் புனைவன புனைந்தும்
> தூசு நல்லன தொடையில் சேர்த்தியும்
> ஐந்து புலன்களும் ஆர ஆர்ந்து
> மைந்தரும் ஒக்கலும் மகிழ்வன மகிழ்ந்து
> இவ்வகை இருந்தோம் ஆயினும் அவ்வகை
> மந்திர எழுத்தைந்தும் வாயிடை மறவாது
> சிந்தை நின்வழி செலுத்தலின் அந்த
> முத்தியும் இழந்திலம் முதல்வ! அத்திறம்
> நின்னது பெருமை அன்றோ!"

என்றுபட்டினத்தார் தெளிவாகக் கூறியுள்ளார். "திருக்குறளில் அறம்பற்றிக் கூற வந்த வள்ளுவனார் இல்லறவியல், துறவறவியல் என்று, இரண்டு பிரிவாகக் கூறியிருக்கிறாரே! அதில், துறவறவியல் என்பது ஆரியரின் மோக்ஷம் பற்றிய கொள்கையாகாதோ?" என்று கேட்கலாம்.

வள்ளுவர் கூறிய துறவறம் ஆரியரின் சந்நியாசக் கொள்கையல்ல. தனிமனிதனுடைய ஒழுக்கங்களில் பேராசையும், துர் ஆசையும் நீங்கி அன்பும் அருளும் குடிகொண்டிருக்க வேண்டும் என்பதை வலியுறுத்தவே துறவறம் கூறியுள்ளார் என்பது நுண்மாண் நுழைபுலம் உடையார்க்கு இனிது விளங்கும். அவர் கூறுகின்ற துறவறத்தில் மனத் தூய்மை ஒன்றே வலியுறுத்தப்படுகிறது. உள்ளம் எதிலும் ஆழ்ந்து விடாமல் பண்பட்டு நிற்பதையே அவர் துறவு என்று குறிப்பிடுகிறார். மனைவி மக்கள் வேண்டாம்! உண்ணாதே! உடுக்காதே! காட்டில் திரி! கண்டதைப் புசி! அதுதான் கடவுளின் அருளைப் பெறுகிற வழி! என்று அவர் எந்த இடத்திலும் கூறவில்லை! அதனை அடியிற் கண்ட திருக்குறட் பாக்கள் வலியுறுத்தும்:—

1. அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றிற் [புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவ தெவன்?

2. மழித்தலும் நீட்டலும் வேண்டா
பழித்த தொழித்து விடின். [உலகம்

ஆரிய நூலார் கூறும் சந்நியாசம்—மோக்ஷம் பற்றி வள்ளுவர் துறவறம் சொல்லியிருந்தால் "நேரினமணியை நிரல்பட வைத்தாங்கு" என்கிற விதிப்படி, திருக்குறளின் கடைசியில் 'வீடு' என்கிற தலைப்பு ஒன்றை ஏற்படுத்திக்கொண்டு சொல்லி இருப்பார், அவர், அவ்வாறு செய்யாமல், அறம் என்கிற தலைப்பிலேயே இல்லறத்துக்குப் பக்கத்தில் துறவறத்தைக் கூறி, அதன் பிறகு பொருட்பாலும், காமத்துப்பாலும் கூறுவதால், அவர் கூறும் துறவறம் 'சந்நியாசம்' அல்ல என்பதை தெளிவுபடுத்திக் கொண்டிருக்கிறது.

இதுவரையிலும் சந்நியாசக் கொள்கை

யும், மோக்ஷ நம்பிக்கையும், தமிழுக்கு உடன்பாடல்ல என்று எடுத்துக் காட்டவே இத்தனையும் சொன்னோம். இனி அறம், பொருள், இன்பம், தர்மார்த்த காமம் ஆகிய இலக்கியங்களை ஆராய்வோம்.

வடவர்களுக்கு அறநூலாக இருப்பது ஆரியர் எழுதிய மனுஸ்மிருதி, நாரதஸ்மிருதி, சுக்கிரஸ்மிருதி போன்ற ஸ்மிருதிகளேயாகும். இந்த அறநூற்களுடன் கலந்தே பொருளியல், அதாவது, அரசியல், அறிவியல், கலையியல் உழவியல், தொழிலியல் வணிகவியல் முதலியனவும் கலந்து கிடக்கின்றன.

"நா ருஷி:குருதே காவ்யம்" என்ற சூத்திரப்படி ஆரியப் புலவர்களை—காவியம் எழுதும் ஆற்றல் படைத்தவர்களை 'ரிஷி' என்று கூறுவது வழக்கம்.

அந்த ரிஷிகளால் அவ்வப்போது எழுதப்பட்ட நீதி சாத்திரங்களே, அதனை எழுதிய ஆசிரியர் பேரால், மனுஸ்மிருதி, சுக்கிரஸ்மிருதி, நாரதஸ்மிருதி என்று வழங்கப் படுகின்றன.

அவைகளில் ஒன்றுக்கொன்று சிற்சில வித்தியாச முடையனவாகக் காணப்பட்டாலும் மூலக் கருத்துக்களில் மாறுபாடில்லாமல் இருக்கின்றன,

அவைகளில் முக்கியமானதும், ஆதியானதும், பெரும்பாலோர் அங்கீகாரம் பெற்றதும், மனுவால் எழுதப்பட்ட மனுஸ்மிருதியே யாகும்,

அந்த மனுஸ்மிருதியின் போக்கை ஆராய்ந்தால் அறிவுள்ள எவனும் அதனை நீதிநூல்—அறநூல் என்று கூறமாட்டான். அந்த நூலுக்கு ஆரிய மதப் பாதுகாப்புச் சட்டம் என்று பெயர் சூட்டினால் பொருத்தமாக இருக்கும்!

ஏனெனில்; அதனுள் மனிதர் எல்லாருக்கும் பொதுவான—அறிவுக்குப் பொருத்தமான அறநெறியைக் காண முடியவில்லை. மாறாக, பார்ப்பனர்களின் சுக வாழ்வுக்காகவே இவ்வுலகம் உண்டாக்கப் பட்டு, அவர்களின் பாதுகாப்புக்காகவே அரசாங்கம் ஏற்படுத்தப்பட்டது போல், மிக்க அகம்பாவத்துடன் பார்ப்பனப் பாதுகாப்பு வழிகளை நீதியின் பேரால் சொல்லப் படுகிறது. உதாரணமாக அங்கு சிலவற்றைக் கூறுவோம். அவை வருமாறு :

அந்தப் பிரமாவானவர் இந்த உலகத்தைக் காப்பாற்றுவதற்காக தனது முகம், தோள், துடை, பாதம் இவைகளினின்றும் உண்டாக்கின பிராமண, க்ஷத்திரிய, வைசிய. சூத்திர வருணத்தாருக்கு இம்மைக்கும், மறுமைக்கும் உபயோகமான கருமங்களை தனித் தனியாகப் பகுத்தார்.

(மனு, அத் 1 சுலோ 87)

பிராமணனுக்கு ஓதல், ஓதுவித்தல், எக்கியம் செய்தல், எக்கியம் செய்வித்தல், தானம் வாங்குதல், தானம் கொடுத்தல் ஆகிய இந்த ஆறு தொழில்களையும் ஏற்படுத்தினர். (மனு. அத் 1 சுலோ 88)

க்ஷத்திரியனுக்கு பிரஜைகளைத் தருமமாகக் காத்தல், தானம் கொடுத்தல், வேதம் ஓதுதல், பாட்டு, கூத்து, ஸ்திரீ முதலிய விஷயங்களில் மனம் செல்லாமை, இவை நான்கையும் ஏற்படுத்தினர். எக்கியம் செய்தல் முதலான தரும காரியங்களும் அவனுக்கு உண்டு. (மனு. அத் 1 சுலோ 89)

வைசியனுக்கு பசுவைக் காப்பாற்றுதல், தானங் கொடுத்தல், வேதம் ஓதுதல், ஜலத்திலும் பூமியிலும் உண்டான இரத்தினம், நெல் முதலியவைகளின் வியாபாரம் செய்தல், வட்டி வாங்குதல், பயிரிடுதல், இந்த ஆறையும் ஏற்படுத்தினர்.

(மனு. அத் 1 சுலோ 90)

சூத்திரனுக்கு இந்த மூன்று வருணத்தாருக்கும் பொருமையின்றிப் பணி செய்வதை முக்கிய தருமமாய் ஏற்படுத்தினர். இதனால் அவனுக்குத் தானம் கொடுத்தலும் உண்டென்று ஏற்படுகிறது.

(மனு. அத் 1 சுலோ 91)

பிராமணனுக்கு மங்களத்தையும், க்ஷத்திரியனுக்குப் பலத்தையும், வைசியனுக்குப் பொருளையும், சூத்திரனுக்குத் தாழ்வையும் காட்டுகிறதான பெயரை இடவேண்டியது.

(மனு. அத் 2 சுலோ 31)

பிராமணனுக்குப் பஞ்சி நூலாலும், க்ஷத்திரியனுக்கு க்ஷணப்ப நூலாலும். வைசியனுக்கு வெள்ளாட்டு மயிராலும் மூன்று வடமாக தோளில் பூணூல் தரிக்க வேண்டியது. (மனு. அத் 2 சுலோ 44)

சூத்திரன் இராசாவா யிருக்கும் இராச்சியத்திலும், (மனு) தருமம் அறியாதவர். பாஷண்டிகள் (இதர மதத்தினர்) இவர்கள் வசிக்கும்படியான கிராமத்திலும், சமீபத்தில் சண்டாளர் (பறையர் முதலியோர்) வசிக்கின்ற கிராமத்திலும் (பிராமணன்) வாசம் செய்யக் கூடாது. (மனு. அத் 4 சுலோ 61)

சூத்திரனுக்கு இம்மைக்கு உபயோகமான அருத்த சாத்திர (கௌடில்யன் போன்றவர்கள் எழுதிய அரசியல் பொருளியல் நூல்)த்தை சொல்லி வைக்கலாகாது.

(மனு. அத் 4 சுலோ 80)

எந்தப் பிரர்மணன் சூத்திரனுக்கு நேராகத் தருமத்தையும், விரதத்தையும் உபதேசிக்கிறானே, அவன் அந்தச் சூத்திரனோ 'அசம்விருதம்' என்னும் (நரகம்) இருளில் மூழ்கிறான். (மனு. அத் 4 சுலோ 81)

க்ஷத்திரியன், சர்ப்பம், வெகு சாஸ்திரம் ஓதின பிராமணன் இவர்கள், தற்காலத்தில் இளைத்திருந்தாலும், க்ஷேமத்தை விரும்புகிறவன் அவர்களை ஒருபோதும் அவமானம் செய்யக் கூடாது,

(மனு. அத் 4 சுலோ 135)

மேற்சொன்ன மூவரும் அவமானம் செய்பவனை தக்க சமயத்தில் நாசம் பண்ணிப் போடுவார்கள். ஆதலால் அவர்களை அவமானம் செய்யக் கூடாது.

(மனு. அத் 4 சுலோ 136)

ஒரு பிராமணன், தன்னை மாமிசம் புசிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளும்போதும், வேறே ஆகாரமில்லாமல் உயிர் போகும்படி நேரிட்ட சமயத்திலும் (மாமிசம் புசிக்கலாம்) மந்திரத்தினால் கொல்லப்பட்ட மிருகாதுகளின் மாமிசத்தையும் புசிக்கலாம். (மனு. அத் 5 சுலோ 27)

ஏனென்றால் பிரமன் இவ்வுலக முழுவதும் ஜீவனுக்கு ஆகாரமாக உண்டு பண்ணினார். ஆகையால் நெல் முதலான தாவரமும் மிருக முதலான சங்கமமும், ஜீவனுக்கு ஆகாரமாகவே இருக்கின்றன.

(மனு. அத் 5 சுலோ 28)

ஆனால், யாகம் செய்து அதில் மிகுந்த மாமிசத்தைப் புசித்தல் 'தேவகாரியம்' என்றும் மற்ற வேளைகளில் தனக்காக ஜெந்துக்களைக் கொன்று புசித்தல் 'இராக்ஷச காரியம் என்றும் சொல்லப்படும்'

மனு அத் 5. சுலோ. 31.

சராச்சர (மனிதர் முதலான உயிரினங்களும் புல் பூண்டுகளும்) விஷயத்தில் வேதத்தில் சொல்லப்பட்ட இம்சையை இம்சை என்று நினைக்கக் கூடாது. வேதத்தினின்றே தர்மம் விளங்குகிறதல்லதா? ஆதலால், அந்த வேதம் இம்சையைச் சொன்னபோதிலும் புண்ணியமாகவே இருக்கும். மனு அத் 5. சுலோ 44

மேலே கண்ட சுலோகங்கள் வருணாச்சிரமத்தை அடிப்படையாகக் கொண்டு பெயரிடுவதிலிருந்து தொழில் முறைவரை சாதிக்கு ஒரு நீதியாகச் சொல்லிக் கொண்டு போவதைக் காணலாம். இதுபோலவே ஆரிய ஸ்மிருதிகள் அத்தனையிலும் கூறப்பட்டிருக்கின்றன.

திரு. காந்தியாரால் பெரிதும் போற்றிப் பயிலப்பட்ட பகவத்கீதை வருணாச்சிரம அடிப்படையில் எழுதப்பட்டதேயாகும். எப்படி யெனில் :

பாரதப் போருக்காகப் படைகள் அணி வகுத்து நிற்கின்றன. பாண்டவர்களில் ஒருவனான அருச்சுனன் தேரிலிருந்து எதிரியின் படைகளைப் பார்வை இடுகிறான். மூதாதையான விஷ்டுமன், வில்லாசிரியனான துரோணன், தாய்மாமனான சல்லியன், மிக நெருங்கிய நண்பர்கள், சுற்றத்தார்கள் அத்தனை பேரும் துரியோதனன் படைவரிசையில் நிற்பதைக் காண்கிறான். அவர்களைப் பார்த்த அருச்சுனனுக்கு மனம் உடைந்து விடுகிறது; போர்க்குணம் மங்கி விடுகிறது. "இத்தனை பேரும் செத்த பிறகு — கொல்லப்பட்ட பிறகு யாரை வைத்து நாடாளப் போகிறாய்? என்று ஒரு கேள்வி அவன் உள்ளத்தில் எழுகிறது. உடனே தேரைவிட்டு இறங்குகிறான். கண்ணனிடம் சொல்கிறான்,

கண்ணா! அதோபார்! எங்கள் மூதாதையான விஷ்டுமர்! இதோ எனது வில்லாசிரியரான துரோணர்! இத்தனை பேரையும் கொன்ற பாவ மூட்டையுடன் நாடாளும் உரிமை பெறுவதைவிட இத்தனை காலமும் காட்டில் வாழ்ந்ததுபோல் இனியும் இருந்து விடப் போகிறேன் என்கிறான்.

அதனைக் கேட்ட கிருஷ்ணன் சமாதானம் சொல்வதும், அருச்சுனனைப் போராடத் தூண்டுவதும் விஷயமாக வைத்து பிற்கால பௌத்த மத தத்துவங்களை பழைய ஆரிய வருணாச்சிரம முறையுடன் கலந்து கிருஷ்ணன் பேரால் எழுதிச் சேர்த்துக் கொண்டதுதான் பகவத் கீதை!

பகவத்கீதையில் அருச்சுனனைத் தேற்றுவதற்காக கிருஷ்ணன் சொல்கிற சமாதானம் என்னவெனில் :—

"அருச்சுனா! நீ ஒரு க்ஷத்திரியன்! க்ஷத்திரியனுக்கு எதிரிகளை ஈவிரக்கமின்றிக் கொல்வதே தர்மம்! அப்படிக் கொல்லாவிட்டால் வருணாச்சிரம தருமத்தைத் தவறியவனாகி விடுவாய்! அப்படி நீ கொல்வதற்கும் அவர்கள் கொல்லப்படுவதற்கும் காரணம் நீ யல்ல! நானே சகலத்திற்கும் காரணம்! நானே கடவுள்! நானே உலகம்! நீ கவலைப் படாதே! உன்னால் நடப்பதாக நினையாதே! நீ, உன்னுடைய வருணாச்சிரம முறைப்படி நட! அதுவே தர்மம்! உன்னை ஒரு பாவமும் அணுகாது! முடிவில் என்னுடைய திருவடியில் வந்து சேருவாய்!"

என்பன போன்றவைகளைச் சொல்லிக் கொண்டு போகிறான். அத்தனை தத்துவங்களையும் சில மணி நேரத்தில் கூறுகிறான். அதைக் கேட்டுக் கொண்டு அருச்சுனன் முதல் நாட் போரிலும் கலந்து கொள்கிறான் என்பது நம்ப முடியாத ஒன்று.

இத்தகைய வருணாச்சிரம முறைகளையும், சாதி வித்தியாச அநீதங்களையும், தமிழ் இலக்கியங்களில் காண முடியாது.

எனவே "வள்ளுவர் செய் திருக்குறளை மறுவறநன் குணர்ந்தோர்கள் உள்ளுவரோ மனுவாதி ஒருகுலத்துக் கொருநீதி" என்று பேராசிரியர் சுந்தரம்பிள்ளை 'மனோன்மணீயம்' என்ற நூலில் தமிழ்த் தெய்வத்தை வாழ்த்தும்போது கூறினர்.

பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
 செய்தொழில் வேற்றுமை யான்
இன்னாசெய் தார்க்கும் இனியவை செய்யாக்கால்
 என்ன பயத்தோ சால்பு
அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்
 உயிர் செகுத்து உண்ணாமை நன்று.

என்று வள்ளுவர் கூறிய மூன்று குறட்பாக்களும் மேலே கண்ட அத்தனை சுலோகங்களையும் ஆணித்தரமாக மறுப்பதை ஆராய்ந்து காண்பராக, (தொடரும்)



# கேள்வி? பதில்.

அஞ்சாநெஞ்சன்

**கே: வாழும் வடக்கு தேயும் தெற்கு என்று மித்திரனின் சித்திரத்தின் மர்மம் என்ன?**

—வீர மகாலிங்கம், இலங்கை

ப : ஆச்சாரியார் ஆட்சிபீடத்திலில்லாத சமயத்தில் மித்திரன் போன்றவைகளுக்கு அங்கலாய்ப்பும் அதே சமயத்தில் வடநாட்டு ஆதிக்கப் பிடிப்பின் கொடுமையும் கண்களை உறுத்துகிறது, ஆச்சாரியாருக்கு ஆட்சிபீடத்திலே ஏதாகிலும் பிடிப்பு கிடைத்தவுடனே வடநாட்டு ஆதிக்கத்தின் கோணங்கித்தனங்கள் சு: மி. க்களின் கண்களை மறைத்து விடும்; வாயையும் அடைத்துவிடும். எனவே ஆச்சாரியாருக்கும் அவரைப் போன்றவர்களுக்கும் ஆட்சிபீடத்திலே ஏதாவது ஒரு பிடிப்பு ஏற்பட தென்னாட்டில் உருவாகிவரும் மகத்தான சக்தியை பயன்படுத்திக்கொண்டு வடநாட்டு ஏகாதிபத்யத்தை மிரட்டுவதுதான் மித்திரனின் சித்திரங்களின் உள் எண்ணமாகும். நான் இவ்வாறு திட்டவட்டமாகக் கூறுவதற்குக் காரணம், வடநாட்டு ஆதிக்கக்காரர்களால் தென்னாடு ஒவ்வொரு துறையிலும் புறக்கணிக்கப்பட்டும், அதை எதிர்த்துக் கேட்கும் தி. மு. கழகத்தின் மீது அதே ஆட்சியினர் அடக்குமுறை கொடுமைகளை ஏவிவிடும் போதும் மித்திரனின் வாயும் கையும் ஸ்தம்பித்து விடுவதிலிருந்தே தாங்கள் உண்மையை உணரலாம்.

*

**கே: அஞ்சா நெஞ்சனே, வ. ஆ. மாவட்ட தி. மு. க. தேர்தலில் ஊழல் என்ற தலைப்பில் 24.4.55 தினத் தந்தி செய்தி வெளியிட்டிருக்கிறதே அது உண்மையா?**

—மா. பிரன்ஸிஸ், பம்பாய்

ப : மாற்றுக் கட்சிகளின் செய்திகளை குறிப்பாக தி. மு. கழக நடவடிக்கைகளை தினத்தந்தி தலைப்பு கொடுத்து வெளியிடும் போக்கில் உங்களுக்கு நம்பிக்கை யிருக்குமாயின் வ. ஆ. தேர்தல் பற்றி தினத்தந்தியின் தலைப்பே வேதவாக்காகக் கருதிக் கொள்ளுங்கள், இல்லையெனில் அச்செய்தியை பொருட்படுத்தாமல் சற்று பொறுத்திருந்து உண்மையைத் தெரிந்து கொள்ளுங்கள். இன்னும் சொல்லப்போனால் 24—4—55-ம் நாள் வெளிவந்த அத்தினத்தந்தி செய்தியின் தலைப்பை படித்துவிட்டு அதன் விவரத்தைப் படித்துப் பார்த்தால் 'ஊழல்' என்ற தலைப்புக்கு சிறிதும் சம்பந்தமே யிருக்காது. எனவே மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும் முடிபோடும் பித்தலாட்டக்காரர்கள் பத்திரிகை உலகில் செய்யும் புரளியைப்பற்றி தாங்கள் பொருட்படுத்த வேண்டாம்.

*

**கே: ஆதித் திராவிடன் என்றால் யார்?**

—கே. ஆர். பி. சாமி, காந்தவல்லி பம்பாய்

ப: புரோகித பரம்பரை தென்னாட்டில் புகுந்து தங்களின் ஆரிய வலையை வீசியபோது அவ்வலையிலே சிக்கிச் சீரழியாத தன்மானத் தமிழர்கள்தான் ஆதித்திராவிடர்கள். அதாவது பார்ப்பனீய சூழ்ச்சிக்கு பலியாகாத பண்புள்ள பழந் தமிழர்கள்,

*

**கே: சுதந்திர திராவிடத்தில் பார்பனர் நிலை என்ன?**

—ஏ. சாமிநாதன், வலங்கைமான்

ப: பிறவியில் உயர்ஜாதி என்ற திறுக்கும் அதற்கான தனி சலுகையும் உலுத்த வாழ்வும் அற்ற மனிதர்களாக வாழ்வார்கள்.

*

**கே: திராவிட கழகம் காங்கிரசை ஏன் ஆதரிக்கிறது?**

—இரா. அ. பழனிச்சாமி, இராசிபாளையம்

ப: பெரியார் அவர்களைக் கேளுங்கள் இதற்கு பதில் சொல்லுவார்கள்.

*

**கே: சித்தூர், தி. த. நா. போராட்டங்கள் வெற்றியடையவில்லையே ஏன்?**

—ஏ. சாமிநாதன், வலங்கைமான்

ப; தோழரே வெற்றி என்பது கடையில் வாங்கும் பண்டம் அல்ல.

*

**கே: அஞ்சா நெஞ்சனே, தி. மு: க வின் அமைப்பு முறை சரியில்லை என்கிறார் என் நண்பர் அதனால் சிறுகுறைகள் ஆகிறது என்றும் சொல்லுகிறார். சட்ட திட்டத்தை ஏன் மாற்றி அமைக்கக் கூடாது?** கோ. கண்ணதாசன் பெங்களூர் 3.

ப: தோழரே, உங்கள் நண்பருக்கு உள்ள இந்த கவலை கட்சியைத்தோற்றுவித்து பணியாற்றுபவர்களுக்கு இல்லாமலிருக்குமா! அவசரப்படேல் என்று உங்கள் நண்பருக்குக் கூறுங்கள். குறைபாடுகளை நீக்க சமயம் நேரும்போது நிச்சயம் வழிவகை செய்யப்படும்.

*

**கே: தி. மு. கழக மாநில மாநாடு எந்தத் தேதியில் நடைபெறும்?** —ம. இளங்கீரன், குடந்தை

ப: உங்களைப் போன்ற தோழர்களெல்லாம் அதற்கான நிதியை விரைவில் வசூலித்துக் கொடுக்கும் பணியை முடித்தவுடனே தேதி அறிவிக்கப்படும்.

திறந்தமடல்

## அழகியசிங்கரின் அழுகை?

உயர் திரு: அழகிய சிங்கர்
அகோபில மடம்

அழகிய சிங்கரே, தாங்கள் கொரடாச்சேரிக்கடுத்த கண்கொடுத்தவணிதம் என்ற சிற்றூரில் 28—4—55-ம் நாள் அடியார்கள் நிறைந்த கூட்டத்தில் பேசிய விவரத்தைப் பத்திரிகைகளில் படித்தேன்.

தமிழ் நாட்டு ஆலயங்களில் தமிழ் மொழியிலேயே 'அர்ச்சனைகள்' அல்லது 'ஸ்தோத்திரங்கள்' செய்யப்பட வேண்டும் என்ற கிளர்ச்சியைப்பற்றி தாங்கள் தத்து வார்த்தம் கூறப்புகுந்து அர்ச்சனைகளை வடமொழியிலேயே செய்யப்பட வேண்டுமென்றும் இல்லாவிடில் ஆண்டவன் தன்மையும் ஆகமங்களின் பெருமையும் கெட்டுவிடும் என்றும் அங்கலாய்த்திருக்கிறீர்கள்

தமிழர்களுக்கு மொழி உணர்ச்சி ஏற்படுவதே மாபெரும் அதிசயமாகும். இந்நிலையில் தாங்கள் ஆண்டவர்களையும் ஆகமங்களையும் சுட்டிக்காட்டி தமிழர்களின் மொழிப் பற்றைச் சாதாரணமாகக் கருதுவதைக் கண்டு மிகவும் வருந்துகிறேன்.

அய்யா அழகிய சிங்கர் சாமிகளே, இதோ பாருங்கள் உங்களைப்போல யான் உளுத்துப்போன வேதாந்தங்களை துணைக்கழைத்து பிறரின் உரிமைகளைப் பறிக்கும் வித்தைகளில் ஈடுபட விரும்பவில்லை.

அர்ச்சனையோ, ஸ்தோத்திரமோ, தமிழகத்திலுள்ள கடவுள்களுக்குத் தமிழில் அவைகளைப் புரிந்து கொள்ள முடியவில்லையென்றால் அவைகளைக் கோயில்களிலிருந்து வெளியேற்ற வேண்டியதைத் தவிர வேறு வழியில்லை. யான் இப்படிக் கூறுவதை— ஆண்டவனைக் காப்பாற்ற மலேயா சென்று படைதிரட்டி வைத்துவிட்டுத் தாயகத்திற்கு திரும்பியுள்ள குன்றக்குடி மடத் தம்பிரான் போன்றவர்கள் கூட ஒப்புக்கொள்வர்.

எனவே வடமொழியில்தான் அர்ச்சனைகள் இருக்க வேண்டும், இல்லாவிடில் தெய்வத் தன்மைக்கு இழுக்கு ஏற்பட்டு உலகமே பாழாகிவிடும் என்று நீங்கள் கூறுவீர்களானால் உங்களுக்கும் உங்கள் பரம்பரையினருக்கும் வேண்டுமானால் உங்கள் செலவிலே பிரத்யேகக் கோயில்களை அமைத்துக் கொண்டு அங்கே வடமொழியிலேயே மந்திரத்தை ஜெபித்து ஆண்டவன் தன்மைக்கு ஆபத்து வராமல் காப்பாற்றிக் கொள்ளுங்கள். அதுதான் நேர்மை.

அதைவிடுத்து தமிழர்களின் ஒற்றுமை உணர்ச்சியை சீர்குலையச் செய்யும் சூழ்ச்சிக்கு ஆண்டவனையும் ஆகமத்தையும் பாரத தர்மத்தையும் துணைக்கழைத்தால் அந்த உளுத்துப்போன பார்ப்பனீயத்துக்குத் தமிழர்கள் முற்றுப்பள்ளி வைப்பது திண்ணம் என்பதை உணர்வீர்களாக.

இன்னும் சொல்லுவேன்; தங்கள் வழி வந்த ஆரியர்களுக்கு ஆலயங்களில் தமிழ் மொழியில் அர்ச்சனை செய்ய மனவளம் இல்லையெனில் புரோகிதர் வேலையைத் தூக்கி எறிந்துவிட்டுச் செல்லுங்கள், தமிழ் மொழியில் மந்திரம் ஜெபிக்கத் தெரிந்தவர்களையும் அதனை ஏற்கும் கடவுள்களையும் தமிழர்கள் தேர்ந்தெடுத்துக் கொள்வார்கள். ஆடு நனைகிறதே யென்று ஓநாய் அழுத கதைபோல ஆகமம் கெட்டுவிடும் ஆண்டவன் உருண்டுவிடும் என்ற பத்தாம்பசலிக் கூப்பாடு போட்டு தமிழ் மொழிக்கு "கோட்ஸே"யின் வேலையைச் செய்ய வேண்டாம். உண்மையை உணர்வீராக, சிரமம் மன்னிக்கவும்.

கூத்தரசன்

## இந்தி ஆதிக்க வெறியர்களுக்கு சாட்டை

டாக்டர் இ. பி. மதுரம், எம். பி.
திருச்சி.

டெல்லிப் பாராளுமன்ற உறுப்பினரே வணக்கம், தாங்கள் ஏப்ரல் 28-ம் நாள் நாசரேத்தில் நடைபெற்ற தமிழ்நாட்டு கிருஸ்தவர்கள் மாநாட்டைத் திறந்து வைத்துப் பேசிய விவரத்தை அறிந்தேன்.

இந்திமொழி ஆதிக்கக்காரர்களின் குறுகிய மனப்பான்மையையும், தென்னாட்டைப் பொறுத்த வரையில் இந்திய சர்க்கார் செய்துவரும் ஓரவஞ்சனையையும் விளக்கியதோடு இதுபோன்ற சம்பவங்கள் மேலும் நடைபெற்றால் தமிழகம் தனியாகப் பிரிந்து விட வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டுவிடுமென்று எச்சரித்திருக்கிறீர்கள். உங்களின் இந்த உணர்ச்சியைக் கண்டு மகிழ்ச்சியடைந்தேன். தென்னாட்டிலுள்ள அரசியல் கட்சிகளுக்கும் மதத்தினருக்கும் இடையே சில அபிப்ராய பேதங்களிருப்பினும் பொதுவாக தென்னாடு, இன்றைய இந்திய அரசியலாரால் மொழித் துறையிலிருந்து மற்ற அனைத்திலும் புறக்கணிக்கப்பட்டு வரும் கொடுமையை எதிர்ப்பதில் ஒன்றுபட்ட தன்மையும் சக்தியும் வளரவேண்டுமென்று பெரிதும் ஆசைப்படுகிறேன். அவ்வித எழுச்சி டெல்லிப் பாராளுமன்றத்திலேயுள்ள தென்னாட்டு உறுப்பினர்களுக்கு ஏற்பட்டால் வடநாட்டு ஆதிக்க வெறியை ஓரளவாவது மட்டந்தட்டி வைக்க முடியும்.

எனவே தாங்கள் டெல்லிப் பாராளுமன்றத்திலுள்ள தென்னாட்டு உறுப்பினர்களை ஒன்று திரட்டி கூடுமான அளவு வடநாட்டு ஏகாதிபத்ய கும்பலுக்கு அறிவு புகட்டுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

கூத்தரசன்

முகவரி மாற்றம்

தோழர் சி, பி, சிற்றரசு அவர்கள் திருச்சியிலிருந்த தமது அலுவலகத்தை சென்னைக்கு மாற்றி விட்டார், இனி அஞ்சல் எழுதும் தோழர்கள் சி, பி, சிற்றரசு நெ, 31 தையப்ப முதலித் தெரு சென்னை-1 என்ற முகவரிக்கு எழுதவும்,

# செய்திகள்

## பம்பாய்

பம்பாய் மாவட்ட திராவிட முன்னேற்றக் கழக செயற்குழுக் கூட்டம் 24—4—55 ஞாயிறு மாலை 4 மணி யளவில் தாராவி குடியரசு நிலயத்தில் செயலாளர் தோழர் எஸ் தியாகராசன் தலைமையில் நடைபெற்றது. கூட்டத்திற்கு எல்லாக் கிளைக் கழக பிரதிநிதிகளும் வந்திருந்தனர். அதுபோது கீழ்க்கண்ட முடிவுகள் நிறைவேற்றப் பட்டன.

இதுவரையில் பம்பாய் மாவட்ட தி. மு. கழகம் என்று இயங்கி வந்ததை பம்பாய் தி. மு. கழகம் என்றும் மாவட்டச் செயலாளரை பொதுச்செயலாளர் என்று அழைப்பதெனவும் முடிவு செய்யப்பட்டது.

பம்பாய் சூழ்நிலைக்கேற்ப சில சட்ட திட்டங்களை உருவாக்கிக் கொள்வதற்காக சட்டதிட்ட செயலாளராக தோழர் த. மு. பொற்கோ அவர்கள் ஏகமனதாக தேர்ந்தெடுக்கப்பட்டார். கழக வளர்ச்சிக்கு ரசீதுபுத்தகம் மூலம் நன்கொடை பிரிப்பதெனவும், அடுத்த செயற்குழுக் கூட்டம் மே இரண்டாவது வாரத்தில் சாந்தவல்லீயில் நடத்துவதென முடிவு செய்யப்பட்டது.

*

### பம்பாய் தி மு. க. கிளைக் கழக செயலாளர்களுக்கு

தங்களது கிளைக் கழக உறுப்பினர்கள், நிர்வாகிகள் செயற்குழுவினருட்பட்ட விவரத்தை அவரவர்களின் முழு முகவரியுடன் தெளிவாக எழுதி பம்பாய் தி. மு. கழக காரியாலயத்திற்கு உடனடியாக அனுப்பித் தருமாறு வேண்டுகின்றோம்.

மேலும் இவ்வாண்டு ஜனவரியிலிருந்து மார்ச் 55 வரையுள்ள வரவு செலவு கணக்கையும் தலைமைக் கழகத்திற்கு உடனடியாகத் தெரிவிக்குமாறு பணிவுடன் வேண்டுகின்றோம்.

அன்பன், எஸ். தியாகராசன்
பொதுச்செயலாளர்
பம்பாய் தி. மு. கழகம்

*

### கொலாபா

25-4-55 அன்று இரவு 9-மணிக்கு கூப்ரோக் திடலில் தோழர் எஸ். பி. பெருமாள் தலைமையில் பம்பாய் கொலாபா தி. மு. க. கிளையின் சார்பாக புரட்சி கவிஞர் பாரதிதாசனின் பிறந்த விழா கொண்டாடப்பட்டது. காஞ்சி தோழர் ராகவன் புரட்சிக் கவிஞரின் படத்தை திறந்து வைத்தார். அதுபோது தோழர்கள் எ. எஸ். தாஸ், க. சு. செகநாதன், எஸ். கே. ராஜூ, எஸ். பி. பெருமாள் ஆகியோர் சொற்பொழிவாற்றினர்கள்.

## ஆமதாபாத்

24—4—55 மாலை 4-45 மணிக்கு நரோடா கழக இல்லத்தில் தோழர் நா. முனுசாமி அவர்கள் தலைமையில் ஆ. ந. தி மு. க கூடியது. இக்குழுவில் பழைய—புதிய நிர்வாகிகளும் விசேஷ அமைப்பாளர்களும் கலந்து கொண்டார்கள். கீழ்காணும் தீர்மானங்கள் ஏகமனதாக நிறைவேறின.

மே 1-ந் தேதி முதல் 10-ந் தேதிக்குள் (ஆலை விடுமுறையைக் கண்டு) பொது உறுப்பினர்கள் கூட்டம் நடத்துவது.

தி. மு. க. சார்பாக ஆமதாபாத் நகரில் பொங்கல் விழா, மேதினவிழா, கழக ஆண்டு விழா ஆக மூன்று விழாக்களும் தாயகத்திலிருந்து கழகப் பேச்சாளர்களை வரவழைத்து சிறப்பாக நடத்த வேண்டும். மேற்படி மூன்று விழாக்களும் முறையே நரோடா, மணி நகர், சமால்பூர் கிளைக் கழகங்கள் நகர தி. மு. க. திட்டப்படி நடத்தித் தர வேண்டும்.

மறுமலர்ச்சி நாடக மன்றம்—முத்தமிழ் நாடகமன்றம் ஆகிய இரு மன்றங்களின் பிரச்னையைத் தீர்க்க ஒரு ஆய்க்குழு நியமிக்கப்பட்டது. அக்குழு இரா. வைத் திலிங்கம், ப. ஆதிமூலனார், மு. பெரியசாமி, கே. சந்திரன், கே. சிதம்பரம், கணேசன் ஆகியோர்கள் அடங்கியதாகும்.

*

### மறுமலர்ச்சி நாடக மன்றம், பாப்புநகர்

24—4—55 மாலை 5-30 மணிக்கு நாடக மன்ற உறுப்பினரும், தி மு. க. (பாப்புநகர்) செயலாளருமான ச. சண்முகநாதன் அவர்கள் நம் தாயகம் செல்வதை முன்னிட்டு நாடகமன்ற இல்லத்தில் ஒரு உபசார விருந்து நடைபெற்றது.

செயலாளர் சு. தேவராசு அவர்கள் விருந்தில் கலந்து கொண்ட உறுப்பினர்கள் அனைவரையும் வரவேற்றார், சு. புரட்சிமாறன் தலைமை வகித்து கலையின் நோக்கம் கலைத் தொண்டு எப்படி யிருக்க வேண்டும் என்பதைப் பற்றி சிற்றுரை வழங்கினார்கள், பின் புதுவை வைத்தியநாதன் அவர்கள் மறுமலர்ச்சி நாடக மன்றம் தொடக்கத்திலிருந்து ச. சண்முகநாதன் உறுப்பினராக பதிவானவரை விளக்க உரையாற்றினர்கள், விருந்து நிகழ்ச்சிக் கூட்டம் இனிது முடிவுற்ற பின் ச. சண்முகநாதன் அவர்கள் வணக்கம் செலுத்தி 'மறுமலர்ச்சி நாடக மன்றத்தில் பணியாற்ற முன்வந்ததிலிருந்து இன்று தி. மு. க. செயலாளராக பணியாற்ற முன் வந்ததற்கு ஆற்றலும் ஆதரவும் தந்தது 'மறுமலர்ச்சி நாடகமன்றம்' என்று தெரிவித்தார்.

## இலங்கை

### பாராட்டுக் கூட்டம்

இலங்கை தி. மு. க. நீதிக் குழுச் செயலாளரும், 'அண்ணா' பத்திரிகையின் இணை ஆசிரியரும், தி. மு. க. தீவிரவாதிகளில் ஒருவருமான தோழர் என். கதிரவன் அவர்கள் தாயகம்செல்ல விருப்பதை முன்னிட்டு இ. தி. மு. க. தலைமை நிலையத்தில் தோழர் அ. ம. அந்தோணிமுத்து தலைமையில் 24—4—55-ல் அன்னாருக்கு ஓர் பாராட்டுக் கூட்டம் நடைபெற்றது. தோழர் கதிரவனின் செயல்திறன், ஆர்வமிக்க பேச்சு வன்மை, இலட்சிய புலமை குறித்து தோழர்கள் இரா. அதி மணி, டி. பி. லூக்காஸ், முத்தமிழ் மன்ற சோமு, மா. சே. அருள், எம். ஐ. ராசாமணி, ஆர். எஸ் பொன்னம்பலம், கே. எஸ் எம். கலாநேசன், ஜி. அன்பழகன், கருணை ஜலால் ஆகியோர் பேசினர் தோழர் கதிரவன் அவர்களுக்கு அன்பர்களால் மலர் மாலைகள் சூட்டப்பட்டதோடு, அன்பளிப்பாக கைத்தறி மேலாடைகளும் கொடுக்கப்பட்டன. இறுதியில் கதிரவன் அவர்கள் யாவருக்கும் நன்றி தெரிவித்ததுடன் கூட்டம் இனிது நிறைவேறியது.

### தாழ்த்தப்பட்டோர் சம்மேளனம்

இராமநாதபுரம் மாவட்டம் செல்வரன் கோட்டை தாழ்த்தப்பட்டோர் சம்மேளனத்தின் ஆதரவில் இலங்கை ஜனநாயக காங்கிரஸ் தலைவர் திரு எஸ். தொண்டமான் அவர்கள் நீர்வேலி பரமேஸ்வர ஜன சமூக நிலைய கல்நாட்டு விழாவில் பழங்குடி மக்கள் உரிமைக்கு போராடக் கூடாது என்று கூறிய நல்லுபதேசத்தை கண்டிக்கக் கடந்த 10-4-55 ஞாயிற்றுக் கிழமை கொள்ளுப்பட்டி காலிரோட் 510/4 இலக்க இல்லத்தில் தலைவர் அ. ச. வேல் அவர்கள் தலைமையில் நடைபெற்றது.

இ. ஜனநாயக காங்கிரஸ் தலைவரின் 'நல்லுபதேசத்தைக் கண்டித்து' தோழர்களான ஆர். எஸ். பொன்னம்பலம், எஸ். வி. இராமச்சந்திரன், எஸ். எம். துரைசாமி, கே. சிவானந்தம் கே. டி. இராமநாதன், எஸ். மாதவன், எஸ். விஸ்வநாதன், ஆகியவர்கள் பேசியபின் செயலாளர் பொன்னம்பலம் அவர்களால் கீழ்க்கண்ட தீர்மானங்கள் முன்மொழிய ஏகமனதாகநிறைவேறின.

பழமைக்குப் பலியாகி பல்லாண்டுகளாக இந்து மதத்தின் கோரப்பிடிக்கு ஆளாகி அல்லலுரும் பழங்குடி மக்கள் உரிமைக்கு போராடாமல் இரக்கமற்ற உயர்சாதிகாரர்களிடம் அன்பு செலுத்தி அடிபணிந்து வாழ வேண்டுமென்று யாழ்ப்பாணம் நீர்வேலி பரமேஸ்வரி ஜன சமூக நிலைய கல்நாட்டு விழாவில் பேசிய இலங்கை ஜனநாயக காங்கிரஸ் தலைவர் எஸ் தொண்டமான் அவர்களை இக்கூட்டம் மிக வன்மையாகக் கண்டிக்கிறது.

மலை நாட்டு தமிழரின் உரிமைக்குப் போராடும் தலைவர் பழங்குடி மக்களின் மனம் புண்பட பேசியதற்காக பகிரங்க மன்னிப்புக் கோரும்படி செல்வரசன் கோட்டை தாழ்த்தப்பட்டோர் சம்மேளனம் கேட்டுக் கொள்கிறது.

### முத்துப்பேட்டை

11-4-55 அன்று எ. எஸ், என். திடலில் தோழர் என். எஸ். இளங்கோ தலைமையில் மாலை 6 மணிக்கு கூட்டம் துவங்கியது. தோழர்கள் ஆ. மீ. அலி சேக்மன்சூர், ந. தருமலிங்கம், இரா. நடராசன், வ. மோகன் ஆகியோர் பேசினர்.

### உள்ளிக்கோட்டை

13-4-55 மாலை 7 மணிக்கு உள்ளிக்கோட்டை ஊராண்மைக் கழக பூங்காவில் ஊராண்மைக் கழக உறுப்பினர் கு. பாலசுந்தரம் தலைமையில் தி. மு. க. பொதுக்கூட்டம் நடைபெற்றது. அவ்வமயம் தோழியர் சத்தியவாணிமுத்து என், எஸ். இளங்கோ, மன்னை ப. நாராயணசாமி, ச. சிங்காரவேலு ஆகியோர் சொற்பொழிவு ஆற்றினர்கள் அதுபோது திராவிட மாணவ முன்னேற்றக் கழக சார்பில் மூவருக்கும் வரவேற்பு இதழ் வாசித்தளிக்கப்பட்டன.

### வல்லநாடு

12—4—55 இரவு 7-30 மணிக்கு வல்லநாடு வ. உ. சி. திடலில் வல்லநாடு திராவிட முன்னேற்றக் கழக பொதுக் கூட்டம் தோழர் கே. வி. கே. சாமி தலைமையில் நடைபெற்றது. அன்று நெல்லை மாவட்ட தி மு. க. முன்னாள் செயலாளர் தோழர் எஸ். கந்தசாமி, நாவலர் இரா. நெடுஞ்செழியன் அவர்களும் சமுதாயம், திராவிட நாடு திராவிடர்க்கே ஆக வேண்டிய அவசியத்தைப் பற்றியும் நீண்ட நேரம் பேசினர்கள்.

### கீழ்ப்பெரும்பள்ளம்

தி மு. கழகச் சார்பில் 7—4—55 வியாழன் மாலை தோழர் என். கிட்டப்பா தலைமையில் ஓர் பொதுக்கூட்டம் நடைபெற்றது. முதலில் தோழர் கே. எஸ். சௌந்தரராசன் பேசினர். பிறகு தோழர் சி. பி. சிற்றரசு அவர்கள் சமுதாய சீர்திருத்தம் குறித்து நீண்ட நேரம் பேசினர்.

### மாயூரம்

நகர தி. மு. கழகச் சார்பில் 10-4-55 ஞாயிறு மாலை 6 மணிக்கு மாயூரம் நகரப் பூங்காவில் ஓர் பொதுக்கூட்டம் நடைபெற்றது. தோழர் என். கிட்டப்பா தலைமை வகித்து சிறிதுநேரம் பேசினர். பிறகு தோழர்கள் கு. அடைக்கலம், ப. நாராயணசாமி, என். எஸ். இளங்கோ ஆகியோர் பேசினர். இறுதியாக தோழியர் சத்தியவாணிமுத்து அம்மையார் அவர்கள் ஐந்தாண்டுத் திட்ட அலங்கோலம் பற்றியும்—சோஷியலிசம் மாதிரி சமுதாய அமைப்பின் உள் எண்ணம் குறித்தும் சொற்பெருக்காற்றினர்கள்.

### கூறைநாடு

17—4—55 ஞாயிறு மாலை 6-30 மணிக்கு கூறைநாடு, ஆராயத்தெருவில் திரு. வி. க. படிப்பகத்தின் சார்பாக ஓர் பொதுக்கூட்டம் நடைபெற்றது. தோழர் வி. ஏ பாண்டியன் தலைமை வகித்தார், தோழர்கள் கே. எஸ். சௌந்தரராசன், என். கிட்டப்பா ஆகியோர் பேசிய பிறகு தோழர் டி. கே. சீனுவாசன் அவர்கள் திரு. வி. க. வின் தொண்டினைப் பற்றியும் இன்றைய அரசியல் நிலைபற்றியும் சொற்பெருக்காற்றினர்,

### பொன்மலை

16—4—55 சனிக்கிழமை மாலை 6-30 மணிக்கு பொன்மலை மேலக்கற் கண்டார் கோட்டை கழக மைதானத்தில் தி. மு. கழக 4, 5-வது ஆண்டு விழா தோழர் இராசமாணிக்கம் தலைமையில் வெகு சிறப்பாக நடைபெற்றது. கழக துணைச்செயலாளர் மு. மாணிக்கம் கழக ஆண்டு அறிக்கை வாசித்தார், தோழர்கள் கோவை செழியன், மதிவாணன், சிற்றுளி சுப்பிரமணியம் ஆகியோர் பேசியபின் தோழர் ஈ வெ. கி. சம்பத் இந்திய சர்க்காரின் ஐந்தாண்டு திட்டத்தைக் கண்டித்தும் இன்றுள்ள தொழிலாளர்கள் நிலையைப் பற்றியும் பேசினர்.





### நெடுங்குளம்

தி. மு. கழகச் சார்பில் 11—4—55 திங்கள் மாலை 6 மணிக்கு தோழர் என். கிட்டப்பா தலைமையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் தோழியர் சத்தியவாணிமுத்து அம்மையார் அவர்கள் திராவிட முன்னேற்றக் கழக சமுதாய—பொருளாதார—அரசியல் கொள்கைகள் குறித்து பேசினர்கள்.

### பெங்களூர்

பெங்களூர் சிட்டி அக்கிப்பேட்டை திராவிட முன்னேற்றக்கழக மனையில் 1—5—55 ஞாயிறு காலை 10 மணிக்கு 'மேதின விழா' ஜி. கிருட்டிணன் தலைமையில் கொண்டாடப்பட்டது. தோழர்கள் வே. இளஞ்சேரன், ஆர், ஆறுமுகம், சி. உலகநாதன், மு. சேரவேந்தன், ந. ப. பொன்னுரங்கம், ஜே. கனகசுந்தரம், ஆகியோர் பேசினர்.

### குடியேற்றம்

1-5-55 குடியேற்றம் பகுத்தறிவு இளைஞர் மன்றத்தின் சார்பாக எ. பட்டம்மாள் தலைமையில் மேதின பொதுக் கூட்டம் நடந்தது. அதுசமயம் வேலூர் தோழியர் திரு தேசியமணி அவர்களும் சென்னை தோழியர் அருண்மொழி பி. ஓ. எல், அவர்களும் மேதினத்தின் மேன்மையை பற்றியும் திராவிட முன்னேற்றக் கழகம் பாட்டாளிகளின் மத்தியில் பங்குக் கொள்ளும் முறையையும் அவசியத்தை பற்றியும் பேசினர்கள், பா. துரையரசு அவர்கள் நன்றி நவில கூட்டம் முடிவுற்றது,

### புரட்சிக்கவிஞர் பாரதிதாசன் பிறந்த தின விழா.

21-4-55 வியாழக்கிழமை மாலை 6 மணிக்குப் பூவிருந்தவல்லி ஆஞ்சநேயர் கோவில் தெருவில் தோழர் டி. கே. பேரருரான் அவர்கள் தலைமையில் மேற்படி விழா கொண்டாடப்பட்டது. தோழர்கள் எஸ். எஸ் தென்னரசு, முத்துராமன் ஆகியோர் பேசினர் இறுதியாகத் தோழியர் அருண்மொழி பி ஓ. எல். அவர்கள் நீண்டநேரம் பேசியபின் விழா இனிது முடிவுற்றது.

### சென்னை 3-வது வட்ட தி. மு. க.

3-வது வட்டத்தின் செயற்குழுக் கூட்டம் 15—4—55 வெள்ளிக் கிழமையன்று மாலை 8-மணிக்கு டி. எம். பாண்டியன் தலைமையில் கழக அறையில் கூடியது. அதுபோது புதியதாக தேர்ந்தெடுக்கப்பட்டவர்களிடம் பொறுப்புகள் அடைக்கப்பட்டது. புதிய செயலாளர் ஜெயகீதம் கழகத்தின் சார்பில் ஒரு நூலகம் ஆரம்பிப்பதைப்பற்றி குறிப்பிட்டார். பிறகு கழக அறையை திறந்து மூடுவதற்கு (பொதுமக்கள் நம் கழக பத்திரிகைகளை படிக்க) நேரம் காலை 6 மணி முதல் மாலை 9 மணிவரை என்று தீர்மானிக்கப்பட்டது.

கழகப் பொருள்களை பாதுகாக்க ஏகமனதாக எஸ். பாண்டியன் பாதுகாப்பாளராக தேர்ந்தெடுக்கப்பட்டார்.

வரவு—செலவு கணக்குகளையும் ஒரு பொதுக்கூட்டம் கூட்டும் யோசனையையும் தலைவர் அடுத்த செயற்குழுவிற்கு தள்ளி வைத்தார்.

### சென்னை பெத்துநாயக்கன்பேட்டை தி. மு. க.

சென்னை 8-வது வட்டம் பெத்துநாயக்கன் பேட்டை தி. மு. கழகத்தின் சார்பில் மாபெரும் பொதுக்கூட்டம் ஒன்று 26—4—55 செவ்வாய் மாலை 6-மணிக்கு, காசி விசுவநாதர் கோயில் திடலில் நடைபெற்றது. தோழர் சி. ஆர். பாலசுந்தரம் தலைமை வகித்தார். தோழர்கள் என். வி. நடராசன், என். எஸ். இளங்கோ, கவிஞர் எம். எஸ். இராமசாமி, போளூர் சுப்ரமண்யம், பன்மொழி ஆகியோர் பேசினர் துணைச் செயலாளர் இரா. மூர்த்தி நன்றி கூற கூட்டம் இனிது முடிவுற்றது.

### தூத்துக்குடி ஸ்பின்னிங் மில் தொழிலாளர் சங்கம்

30—4—55 சனி மாலை 4 மணிக்கு ஸ்பின்னிங் மில் தொழிலாளர் சங்கத்தின் முன்பு 1955-56-ம் ஆண்டு சங்க நிர்வாகத் தேர்தல் நடைபெற்றது. சுமார் 300 மேற்பட்ட தொழிலாளர்கள் கலந்துக் கொண்டனர். அதுசமயம் தோழர் கே. வி. கே. சாமி தலைவராகவும், ராமசாமி பிள்ளை, எ. காசி முதலியோர் துணைத் தலைவர்களாகவும் கே. தாளமுத்து செயலாளராகவும், ஞா. செல்லப்பா, இளைய பெருமாள் நாடார் முதலியோர் துணைச் செயலாளர்களாகவும் சுந்திரபாண்டி, புஷ்பம், அமிர்தம், க. அருணாசலம், சித்திரவேல், மல்லிகா கன்னியம்மாள், வள்ளியம்மாள், கே. கோபால், எஸ், எஸ், லிங்கம், கோவில் பிள்ளை, ஜெபமாலை நாடார், தங்கவேல் நாடார். முத்துக்கருப்பண்ண தேவர், வைகுண்டம் அருணாசலம் முதலியோர் செயற்குழு உறுப்பினர்களாக ஏகமனதாக தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

1—5—55 ஞாயிறு காலை சங்கமாளிகையான சொந்தக் கட்டிடத் திறப்பு விழா தோழர் எம். எஸ். சிவசாமி தலைமையில் நடைபெற்றது. பல தோழர்கள் பேசினர் என துணைச் செயலாளர் ஞா. செல்லப்பா அறிவிக்கிறார்,

---

### திராவிட நாட்டு கல்வி—தொடர்ச்சி

'மதுரைத் தென்றல் வந்தது காணீர்'
(சிலப்-புறஞ்சேரி-130-132)

என சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் பொதியத் தென்றலினும் மதுரைத் தென்றற்குள்ள சிறப்பைக் கூறுதலுங் காண்க.

மதுரைமாநகர் தமிழ் வளர்க்கும் தாய்மை இடமாயிருந்ததெனின் மற்ற வஞ்சி, காஞ்சி, புகார் போன்ற நகரங்கள் சேய்மை இடங்களாயிருந்தன.

அளவை நூல் முறையைப் பின்பற்றிச் சான்றோர்பலரும் தம்முட் பொருள் வேற்றுமை கருதி உவழ்ந்து பேசி தாம் கருதிய பொருளை விளக்க முயன்றனர். இவ்வாறு கல்வித் துறையில் தன்நிகரற்ற புலமை பெற்ற சான்றோர் தம் கருத்தினை நிலைநாட்டக் கருதி எண்ணம் உறழ்ந்து கூறுவாருளராயின் வருக எனப் பேரவையிற் கொடிகட்டிஅழைத்தலை வழக்கமாகக் கொண்டனர். இப்படியான அறத்தின் மிக்கப் புலவர்கள் காவிரிப்பூம்பட்டிணத்தை சிறப்பித்தனர் என உருத்திரங்கண்ணனார் தமது பட்டினப் பாலையில் கூறுகின்றார்.

'பல்கேள்வித் துறையோகிய
தொல்லாணை நல்லாசிரிய
ருழற்குறித் தெடுத்து வுருகெழு கொடி [யும்
(திணை169—71)

அக்காலத்தில் காவிரிப்பூம் பட்டிணம் கல்வித் துறையில் முன்னணியில் இருந்தது மேற்கண்ட பட்டினப் பாலைப் பாட்டினால் அறியலாம். காஞ்சி வஞ்சி போன்ற பல நகர்கள் தமிழ் வளர்த்து வந்த வரலாறுகள் உண்டு; ஈண்டு கூறின் விரியும் எனவஞ்சி விடப்பட்டது.

இவ்வாறெல்லாம் கூறப்பட்டதினின்றும் தெரிவது என்ன! திராவிட கல்வி வரலாற்றில் சங்க காலமே பொற்காலமென திகழ்ந்த உண்மையும் குறிப்பாக பெண் கல்வி மிக உச்ச நிலையில் சேருற்று இருந்த உண்மையும் தெரிய வரும். துவக்கக் கல்வி முதல் உயர்தரக் கல்வி வரை உயர்ந்த முறையில் சிறப்புற்றிருந்தன என்பதும் தெளிவாகும். ஆசிரியர் மாணவர் உறவும் முறையும் மெச்சத் தகுந்த முறையில் இருந்தன வெனவும் ஆசிரியர் உலகும் மாணவர் உலகும் தமிழைப் போற்றிக் காத்து வந்தனர் என்பதும் தெரிய வரும், இப்படிப்பட்ட புகழ் சான்ற பொற்காலமாம் சங்ககாலத்தை நம் தம் திராவிட நாடு மறுபடியும் பெற்று கல்வியில் சிறந்த நாடாகத் திகழ வேண்டும் என்ற உறுதியுடன் பணியாற்றுவோமாக.

—திராவிடப்பித்தன்

## திராவிட முன்னேற்றக் கழக கிளைக் கழகங்களின் தேர்தல் முடிவுகள்

பொதுச்செயலாளரின் அறிக்கைப்படி 27—3—55ம் நாள் நடைபெற்ற தி. மு. க. கிளைகளின் தேர்தல் முடிவுகள்

(இதுவரை வந்துள்ள விவரங்கள்)

**செங்கற்பட்டு நகரம் (செ. மா.)**
செய் : செ. எ, பலராமன்
து. செய : செ. க. சபாபதி
பொரு : செ. பர், வேணு
மா. பி : ஜே. ஏ. வகாப், பெ. ஏ. வேத [கிரி

**திருமழிசை (செங். மா).**
செயலாளர் : சி. இராசன்
துணைச் செயலாளர் : தி க. சண்முகம்
பொருளாளர் : பி. கே. வீரபத்திரன்
மாவட்டப் பிரதிநிதி : டி. கே. போரு [ரான்

**பொன்மலை (தி. மா.)**
செய : கே. துரைராஜ
து. செய : எம். மாணிக்கம்
பொரு : டி. ஆர். கோவிந்தன்
மா, பி : எல். கிருஷ்ணமூர்த்தி

**கலையப்புத்தூர் (தி. மா.)**
செய : வே. சக்தியேந்திரன்
து. செ : ப. வெங்கட்ராமன்
பொரு : தாமோதரன்
மா. பி. வெ, ஆறுமுகன்

**எருமப்பட்டி (தி. மா.)**
செய : சி. வேணுகோபாலன்
து. செய : சி. இராமதாசன்
பொரு : ம. தர்மலிங்கம்
மா. பி : சீ. சாமிதாஸ்

**வல்லநாடு (நெ. மா.)**
செய : எம். சங்கரன்
து. செ : எம். செல்லதுரை
பொரு : எஸ். வி. அருணாசலம்
மா. பி. : எம். செல்வதுரை

**கடலூர் ஓ. டி. (தெ. ஆ. மா.)**
செய ; கி, கோவிந்தராசன்
து செ : சி, துரைராஜ
பொரு : அ. கந்தசாமி

**திருவெண்ணெய்நல்லூர் (தெ. ஆ. மா.)**
செய : கி. குமாரசாமி
து. செய ; கா. சானிபாட்சா
பொரு : தி வ. செயராமன்
மா. பி : தி. வ. அண்ணாதாசன்

**சிறுமதுரை (தெ. ஆ மா.)**
செய : தீ. அ பழனி
து. செய : என், தணிகாஜலம்
பொரு : கே. தங்கவேல்
மா. பி : எம். எ. தாண்டவராயன்

**நாட்டாமங்கலம் (சே. மா)**
செய : கே. முத்தசாமி
து செய : எம். மாணிக்கம்
பொரு : எல். ராஜூ
மா பி : கே. முத்தசாமி

**ஒட்டன் சத்திரம் (ம. மா.)**
செய : நா. ரெங்கசாமி
து. செய : மு. சடையப்பா
பொரு : ம. ரகிம்
மா. பி : நா. ரெங்கசாமி

**வாணியம்பாடி (வ. ஆ. மா.)**
செய : எ. எல். முனிரத்தினம்
து. செய் : வி. என், தந்தப்பன்
பொரு : ஆர். திருஞானம்
மா. பி : எம். பி. வடிவேல், டி. ஏ. ஆறுமுகம், எ. எல். முனிரத்தினம்

**பந்தநல்லூர் (த. மா.)**
செய : பி. லிங்கன்
து, செ : இரெ. சின்னத்தம்பி
பொரு : இரா. சொக்கலிங்கம்
மா பி : மு. இராமசாமி

**பரமக்குடி (இரா. மா.)**
செய : மு ரா. லிங்கன்
து செய : எஸ். சரளாமணாளன்
பொரு : த. வைத்தியநாதன்
மா பி ; எஸ். தண்டபாணி, எ. செல்லச்சாமி




## 8. வாணிதாசன்

அழகுணர்ச்சியின் மொழி பெயர்ப்பு கவிதை. அந்தக் கவிதையின் இனிமை ஆயிரமாயிரம் ஆண்டுகளாக தமிழிலே பொலிவு பெய்து வாழ்த்துகிறது. தமிழின் வனப்பெல்லாம் — சுவையெல்லாம் வாணிதாசன் படைக்கும் வரிகளிலே நிரம்பித் ததும்புகின்றன. இன்றுள்ளய இளம் பரம்பரையினரில் வாணிதாசன் நிறைந்த புகழை மணந்தவர்...

இசைப் பொலிவும், உவமை அழகும் இவரிடம் குளிரோடையென சங்கீதம்பாடிச் செல்கின்றன. புரட்சிக் கவிஞரின் கன்னல் தமிழ் வாணிதாசனை தாயகத்துக்குத் தந்தது. அந்த மணிச் சோலை பெற்ற மலர்களில் இவர் மணந்தரும் முல்லை. வாணிதாசன் கற்றறிந்தோரின் கண்ணின் மணி— கல்ல தமிழர் செல்வம்—இன்னும் எத்தனையோ சொல்லலாம் இவர் சிறப்பை விளக்க, இந்த நாட்டிலே எப்போதுமே முட்டாள்கள் மலிவு...எதையும் ஒப்பிடும் ஆட்டு சிந்தையினர் இங்கே அதிகம்... புரிந்து கொண்டதுதான் வேதம்...புரியாதவைகளை மண்ணிலே விட்டெறிந்து கூத்தடிக்கும் இவர்களிடையே கவிஞன் வாழவே முடியாது! மொக்கு நினைப்புகளோடு இலக்கியப் பணி செய்த வாணிதாசன் இன்றுதான் நமக்கெல்லாம் ஒரு பிரச்னையாக வளர்ந்திருக்கிறார்...இந்த புகழ் அவருக்கு எப்போதோ கிடைத்திருக்க வேண்டும்... தமிழகம் அவரை மெள்ள மெள்ளத்தான் புரிந்து கொண்டது...ஏனென்றால் கவிதை புரியாது' என்ற இருட்டு சித்தாந்தத்தை மிகப்பலர் பெற்றிருந்தார்கள்!

தேனிலே கனைத்த சொற்களை தொகுத்து, இசையெனும் கீதச்சுவை பெய்து வாணிதாசன் எழுதும் வரிகள் அத்தனையிலும் இனிமை! இனிமை! இயற்கையை வர்ணிக்கும் போது அந்த நெஞ்சம் முழுக்க முழுக்க தமிழ் நெஞ்சமாகி விடுகிறது! சோபித சொற்கள் அழகு உவமைகள் எங்கிருந்துதான் பொங்கிப் புரளுகின்றனவோ? எல்லாமே தமிழுக்கு 'சிரஞ்சீவத்துவத்தை' தாரை வார்க்கின்றன. வாணிதாசன் தந்த தமிழே—தமிழ் தந்த வாணிதாசனே என்றெல்லாம் மலர்ச்சி பெற்ற எண்ணங்கள் வாழ்த்தும்!

வாணிதாசன் தந்த கொடிமுல்லை சுவையான காவியம்—இனிக்கும் தமிழ் ததும்பும் எழிலோவியம். காவியத்தின எல்லா சிறப்பையும் 'கொடிமுல்லை' பெற்றிருக்கிறது. புதிய நடை—சோபித வர்ணனை—அழகு உவமைகள் அனைத்தும் அதுவரை யில்லாத தமிழ் விருந்தை படையலாக்குகின்றன.

"பொன்னலைகள் விசுகின்ற கடலோ! வானேர் புதுநாடோ! மலைசெறிந்த காடோ! என்றன்
அன்னை எழில் கலையாசி நீட்டுகின்ற
அழகுத் திரைச் சீலையோ! செங்குருதி ஆறோ?
பொன் பழுக்கும் பெருலையோ!..."

அந்திவானத்தின் சோபித மெருகை காட்சியாக்குகிறார் கவிஞர். உயிர் இழையோடும் சொற்கள் இங்கே தமிழ் நடத்துகின்றன. அழகன் கொடி முல்லையை காண்கிறான்...தென்றல் சோலை, சிட்டு பறக்கும் வேலை, ஆசை அள்ளும் கருவிழிகள் காதல் பேசின.

"பவளமல்லி நீ என்றான் அழகன்; நீரோ
அதில் மொய்த்து பாடுகின்ற சுரும்பர் என்றாள்
குவளைப்பூ நீ என்றான்; நீரோ அந்தக்
குட்டையிலே தேங்கும் நீர் என்றாள்; பூத்துத்
துவளுகின்ற கொடிமுல்லை நீயே என்றான்
கொழுகொம்பு நீர் என்றாள்; விம்மும் தோளை
அவனுடல் மேல் அவள் சாய்த்தாள்! அடடா [அங்கே
அழிந்ததொரு செங்கருப்பங் காடுதானே!"

உணர்ச்சி இங்கே தேனுகப் பரிமாறப் படுகிறது. பாரதியின் பண்பு, பாரதிதாசனின் சொல்வளம், தமிழின் நிறைந்த மெருகு எல்லாமே வாணிதாசனிடம் வாழ்கின்றன.

'செங்கருப்பங் காடே அழிந்ததாம் அங்கே!' சிருங்கார ரசம் சுவையோடு பூரணத்துவம் பெறுகிறது. தித்திக்கும் தமிழ் கவிதை வரிகளிலே தேங்கித் ததும்புகிறது. உவமைகள் அனைத்தும் ஜீவ எழிலின் பழுதற்ற படைப்புகள்! அழகன் இன்னும் சொல்கிறான்.



"வானின்றி வாழ்கின்ற பச்சையுண்டோ?
மடங்கு திரை நீர் நிலைகள் இன்றேல் இங்கு
மீனுண்டோ? பண்ணுலகில் இன்று வாழும்
மிகச்சிறிய உயிர் உண்டோ வெய்யோன் இன் [றேல்?
தேனுண்டோ மலர் இல்றேல்? இன்பம் சேர்க் [கும்
குளிர்நிலவு கதிரின்றேல் உண்டோ? இங்கு
நானுண்டோ நீ இன்றேல் என்றான்..."

சொற்களில் தேக்கமில்லை; புரியாத வலைபின்னல் இல்லை; நிறைந்த தெளிவு படிந்த கவிதைகள் வாணிதாசனின் போற்றுதற்குரிய சிறப்பு வரிகள் ஒத்திசைப்பு தவறாது விழுகின்றன. அவர் தமிழை மணந்த புகழின் செல்வர். வருநாளை இனிமையாக்க அவரது எழுத்துக்கள் பெரிதும் பயன் படும். சின்னஞ்சிறு நிகழ்ச்சிகளைக் கூட கவித்துவத்தால் சுவை சேர்க்கும் அந்த ஆற்றலை எண்ணி, எண்ணி வாழ்த்த வேண்டும்...'விளக்கே வாழி' என்ற தலைப்பில் இந்த கவிதையை வழங்குகிறார் வாணிதாசன்...சின்னஞ் சிறு மழலைச் செல்வம் விளக்கைப் பார்க்கும் விந்தை, நெஞ்சை அள்ளிச் செல்கிறது அந்தப் பாடல்...

தன்னரும் குழவி மேனி
தடவிப் பின் முதுகில் தட்டி
அன்னை கண்ணயரும் கண்கள்
அயராத குழவி காலை
முன் தூக்கிச் சப்பும்; உன்னை
முறைத்திடும்; சிரிக்கும்; பேசும்
உன்னிடம் குழவிக் கேற்ற
உரையாடல் உண்டு போலும்!

உணர்ச்சி ஓவியம். பிள்ளை நிலவின் அழகு விளக்கம்! இத்தகு வசீகர படைப்புகள் வாணிதாசனுக்கே உரியவை. இசைப் பாடல் வரைவதிலும் இவர் வல்லவர். 'தொடுவானம்' இனிய பாடல்களின் தொகுப்பு. இன்னும் 'தமிழச்சி' 'எழிலோவியம்' போன்ற கவிதை நூற்கள் கவிஞரின் வளரும் புகழுக்கு பூச்சொரிகின்றன. 'பெரிய இடத்துச் செய்தி' இவர் எழுதிய சின்னஞ்சிறு ஏடு—மாப்பசானின் கதை இது. பிரெஞ்சு மொழியின் பதமாகாத 'கரடுமுரடு' ஆங்காங்கே நிழலிட்டாலும் சுவையான நடை போற்றுதற்குரியது.

வாணிதாசன் கதாசிரியரல்ல—நிறைந்த கவிஞர். கதைகளையும், நாடகங்களையும் எழுதிக்குவிக்க தமிழகத்தில் பெரும் அணி வகுப்பே காத்திருக்கிறது! நல்ல கவிதைகள் தமிழுக்கு மலிவுச் சரக்கல்ல. பாரதியாரையும் பாரதிதாசனையும் வைத்துக் கொண்டு எத்தனை காலத்திற்கு திருப்தியடைவது? கம்பனும் சேக்கிழாரும் கடந்த நாளின் நினைவுச் சின்னங்கள்; வருநாளைய தமிழகத்திற்கு வளம்தர அவர்களது கவிதைகள் திராணியற்றவை!...ஒரு மொழியின் சிறப்பு அதன் பழம்பெருமை மட்டுமல்ல—கால மாறுதலோடு மொழியின் வளர்ச்சியும் பிணைந்திருக்க வேண்டும். கவிதை கடவுளின் வரப்பிரசாதம் என்று மட்டுமல்ல—ஆயிரம் வருடங்களுக்கு ஒருமுறைதான் நல்ல கவிஞன் தோன்றுவான் என பேசிப் பெருமைப்படும் நாடு இது. இங்கே கவிஞனை பிறப்பிலே சமாதி வைத்து விடுவார்கள்! புதிய நிலை இப்போதுதான் அரும்பு விட்டிருக்கிறது. கவிதை செல்வங்கள் இன்னும் நிறைய வேண்டும் நமக்கு. வாணிதாசன் போன்றோர் இலக்கியத்தில் 'பொற்காலம்' உதயமாக தங்களது நினைப்பை சிலவிட வேண்டும். கட்டுரைக் கதம்பங்களையும், மொழி பெயர்ப்புகளையும் படைத்துப்போட நம்மிடையே மிகப்பலர் உள்ளனர். இல்லாததை உருவாக்குவதே சிறப்பான செயல்...!

காலம் விரைகிறது. சாதனைகள் அரைகுறையாக காட்சி யளிக்கின்றன. நாம் செய்ய வேண்டியவைகளை நினைத்தால் சாதித்தவை 'கைம்மண்ணளவு' கூட இல்லை! இன்றைய புகழுக்கு சிந்தனையாளர் நேற்றே விதையிட்டனர். நாளைய சிறப்புக்கு நாம் இன்றே நல்லன படைத்திட வேண்டும் அதுவும் விரைவில்!

கவிஞர்கள் வரப் பிரசாதிகளல்ல. கடவுளையும் மறுக்கும் கொள்கையாளர்கள் என்ற தத்துவத்திற்கு புதுஉயிர் பெய்தவர் பாரதிதாசன். அவரது அடிச் சுவட்டில் ஒரு பரம்பரையே உருவாகிவிட்டது. அத்தகையோர் நமக்கு வாய்த்த மதிப்பற்ற செல்வங்கள்—வாணிதாசன் இளம் மேதை—கவிதையை—காதலை—இன எழுச்சியை இன்றைய அரும்பு பருவத்தினருக்கு கற்றுத்தந்த நல்லாசிரியர். வாணிதாசனின் புகழ் வளருகின்ற பிறை நிலவு...எதிர்கால சந்ததியினருக்காக அந்த தித்திக்கும் சுவைப் பிழம்பை திராவிடர் நல்வாழ்வை—புதுவை தந்த தமிழை வாழ்த்தி மகிழ்வோம்.

[அடுத்தது—சுரதா]

ஆசிரியர், அச்சிடுபவர், வெளியிடுபவர், என். வி. நடராசன், சோமு அச்சகம் 16, ரிலையன்ஸ் ரைஸ் மில் தெரு, சென்னை 1.

